# அண்ணா பரணி



ஆசிரியர்

புலவர் ஆ. நாகராசன்

முத்துமாரி பதிப்பகம்

மயிலவன் மாடம்,

122-H, கீழைவைத்தியநாதபுரம்

தத்தனேரி அஞ்சல்

மதுரை-18

உரிமை : முத்துமாரி பதிப்பகம்

முதற்பதிப்பு : சனவரி 1989

தலைப்பு : அண்ணா பரணி

ஆசிரியர் : புலவர் ஆ. நாகராசன்

காகிதம் : 10.9 தமிழ்நாடு வெள்ளைக் காகிதம்

அளவு : கிரவுன் 1×8

பைண்டிங் : பாக்சு போர்டு

அச்சு எழுத்து : 10 புள்ளி

வெளியீட்டாளர் : முத்துமாரி பதிப்பகம்

அச்சிட்டோர் : செந்தில்வேலன் அச்சகம் மதுரை-16

பக்கங்கள் : 4+166=170

விலை : உருபாய் 12-50



# முன்னுரை

அண்ணா பரணியின் விளக்கத்தை ''அண்ணா பரணியின் விளத்தம்'' என்று தலைப்பிட்டுக் கூறியிருக்கின்றேன். பாவாணர் கூற்றுப்படி ''விளத்தம்'' என்பது விளக்கம் என்று பொருள்படும்.

இந்நூலைக் கைப்படி எடுத்து தட்டச்சாக்கி இன்று அச்சாவதற்கு வித்திட்டு பத்தொன்பது ஆண்டுகளாக இதைப்பற்றியே எண்ணிக் கொண்டிருந்த புலவர் திரு. ம. சுப்பிரமணியன் அவர்களுக்கும் இந்நூலச்சில் பிழை நீக்கியுதவிய மதுரைப் பிள்ளைமார் சங்க மேல் நிலைப்பள்ளித் தமிழாசிரியரும் என்னுடைய தொல்காப்பியச் சொல்லதிகார ஆசிரியருமான புலவர் திரு அ. மணிவாசகம் அவர்களுக்கும் அணிந்துரை வழங்கிய யாதவர் கல்லூரி முதல்வர் திரு தமிழ்க்குடிமகனார் அவர்களுக்கும் அட்டைப் படத்தை ஆவலோடு வரைந்து உதவிய அண்ணன் திரு முனியாண்டி அவர்களுக்கும், தமிழ்க்கூத்தன், திரு ஆ. பெ. அரசு அவர்களுக்கும் திரு மாசாணமுத்து அவர்களுக்கும் உறுதுணை புரிந்த ஆலையின் அனைத்து நண்பர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவண்

புலவர் ஆ. நாகராசன்

# பொருளடக்கம்

*வெல்க!* *வாழ்க!*

## தமிழ்க்குடிமகன், *க.மு. (எம்.ஏ.,)*

*தமிழ் விரிவுரையாளர்,*

யாதவர் கல்லூரி, மதுரை-2

"தமிழின் பெருமை" என்று நாம் மார்தட்டிக் கொள்ளும் போதும் "தமிழ் இலக்கியங்கள்" என்று பூரிப்போடு சுட்டும் போதும் சங்க காலத்தையும் சங்க இலக்கியங்களையும் நினைவில் கொண்டுதான் பேசுகிறோம் என்ற உண்மையை யாரும் மறந்துவிட மாட்டோம் என்று நினைக்கிறேன். அதற்குப் பின்னால் எழுந்து, தமிழிற்குச். சிறப்பளித்துக் கொண்டிருப் பவை விரல்விட்டு எண்ணும் அளவில் மிகச் சிலவே. இந்த நூற்றாண்டில் பாரதி, பாரதிதாசன், பெருஞ்சித்திரன் போன்ற முத்திரைப் பாவலர்கள் தங்கள் பாக்களால் தமிழுக்குப் பெரிய சிறப்பையும், உணர்ச்சி கொண்ட இளைஞர் குழு காயத்திற்கு உரிய உண(ர்)வையும் தந்திருக்கிறார்கள். பாவுலகம் ஒரு புறம் உருப்படியாகவே இருக்கிறது என்ற மனநிறைவிருந்தாலும், மறுபுறம் பாட்டரங்கம் என்ற பெயராலும், 'தாளிகைக் கவிதைகள்' என்ற தலைப்பாலும் குப்-பைப் பாட்டுகள் பல குவிந்து கொண்டிருக்கின்றன. யாப்பைப் பற்றியே கவலையில்லை என்றொரு கூட்டமும் கரைந்து கொண்டிருக்கிறது. இதற்கெல்லாம் காலம் விடை சொல்லும்.

பாவுலகம் புதிய கோணங்களில் தமிழுக்குச் சிறப்புத் தேடித்தர முனைகின்றது என்பதற்கு நண்பர் நாகராசன் யாத்த 'அண்ணா பரணி' ஒரு சான்றாகும். சிற்றிலக்கிய வகைகளில் பரணியும் ஒன்று. பல பரணிகள் எழுந்திருப் பினும் 'கலிங்கத்துப் பரணி' ஒன்றுதான் அனைவராலும் விரும்பிப் பயிலப்படுகின்றது. அன்று ஆனை ஆயிரம் அம ரிடை வென்றதால் பரணி பாட முடிந்தது. 'பரணி இலக்-சியமும் வாழ வேண்டும்; புதிய பரணிகள் படைக்கப்பட வேண்டும்; பழைய மரபும் மாறக்கூடாது' என்றால் நாம் பரணி இலக்கியத்தின் பக்கமே போகக்கூடாது. பூனைக்கு அஞ்சியே நாம் செயல்களைத் தொடர்வதா கூடாதா என்று ஆராயும்போது, ஆனையை, அதுவும் ஆயிரம் ஆனையை அமரிடை வெல்லும் செய்தி நம் கற்பனைக்குக் கூட எட்டாத ஒன்று. நம் வீட்டுப் பரண் மீது வேண்டுமானால் ஏறி உட் கார்ந்து கொண்டு ஏதாவது பழைய பாட்டை முணுமுணுத் தால் அது பரணிப் பாட்டாகலாம். வேறு வழியே இல்லை!

கட்டுக்கோப்பிலே கட்டுப்பாடாகவும், கருத்துப்போக்கிலே புதுமையாகவும் வளர்வதே இனித் தமிழ் வளர்ச்சியாகும். இந்த விதியை ஒட்டிப் பரணி இலக்கியத்திற்குப் புத்துயிர் கொடுக்கும் முறையில் தேர்தல் களத்தில் எதிரிகளை வென்ற கருத்தினை அமைத்துப் பரணி பாடியிருப்பது வரவேற்கத் தகுந்தது. அதிலும் மொழியுணர்ச்சி, மொழியாற்றல், அறிவு, அன்பு, ஆளுமை ஆகிய அனைத்துப் பண்புகளும் அடங்கிய ஒருவரை மக்களாட்சிக் காலத்தில் காணமுடியாது. கண்டா லும் அவர் வெற்றி காண்பது மிக அரிது. ஆனால் அண்ணா தனிப்பிறவி. அவர் தலைமையும், தகுதியும் நாடறிந்த நற் பண்புகள்.

'அண்ணா பரணி' காலத்தை உணர்ந்த கருத்துப்படையல்

*முத்தம் பெறவே கொழுநரிடம்*
*முதலில் அவர்முன் குழந்தைக்கு*
*முத்தம் இடுவீர் மயக்கிடுவீர்*
*முடிப்பீர் அவாவைத் திறமினோ !*

என்று கடை திறப்பிலும்,

*வீழ்ந்திருக்கும் கோழையையும் தட்டித்தூக்கி*
*வெற்றிக்குவழிவகுப்ப தண்ணு பேச்சே!*

என்று அண்ணு பேச்சுப் பற்றியும்,

*'வானின் வெண்ணிலா ஒன்றையே விட்டனர்'*
என்று தொண்டர் கொடி பறக்கவிடும் திறம் பற்றியும் குறிப் பிட்டிருக்ம் இடங்கள் சுவைக்கத் தக்கவை.

*ஆணை யிட்ட காமராசர்*
*அன்னையூரில் தோற்கவே!* என்ற இட்ம் நயமானது. சுருங்கிய சொற்களால் செய்திகள் அனைத்தும் செறிவாக மிடையப்பட்டுள்ளன. குறைபாடும் உண்டு. சற்றுக் கவனத்தோடு திருத்தினல் நூல் செப்பமாகும். தில்லிக் கயவர் போன்ற சில சொற்கள், குல வேறுபாடு தோன்றக் குறிக்கும் இடங்கள் இவை மாற்றப்பட் வேண்டும்.

மேலும் இந்நூல் கால வெள்ளத்தை நீந்திக்கரையேற வேண்டுமானால் ஆங்காங்கே விழுந்திருக்கும் தேவையற்ற வட சொற்களை அறவே களைதல் வேண்டும். கரம் சமாதி போன்ற சொற்கள் நீங்குவதே பரணிக்குச் சிறப்பு.

*எதுதமிழ் வளர்ச்சி என்றே*
*எண்ணிடும் போதில் நல்ல*
*புதுமையில் திறனைக் காட்டிப்*
*புவியினை எழுத்தால் பேச்சால்*

மதுவுணும் வண்டாய் மாற்றி
மருட்கையை விளைத்தான் அண்ணன்!
இது தமிழ்ப்பரணி யென்றே
எடுத்தனன்; வெல்க! வாழ்க!

அன்பன்

**தமிழ் குடிமகன், க.மு**

தி.பி. 2001, சுறவம்

30 — 1 — 70

# அண்ணா பரணியின் விளத்தம்

பரணியிற் றலையாயது ''கலிங்கத்துப் பரணியே'' அவ் வெழிற் பரணியை யாத்தளித்தவர் சயங்கொண்டாராவார். அவ்வெழிற் பனுவலைப் பெற்றவன் முதற்குலோத்துங்கன் ஆவான். அப்பனுவலிற் கவிச்சுவையும், கற்பனைச் சுவையும் மிகுந்து கிடக்கின்றன. அப்பனுவல் தமிழர்தம் மறத்தையும் அறத்தையும், திறத்தையும் செப்புகின்றது. அத்தகைய சிறப் பைப் பெற்ற அப்பனுவல் விதியையுங் கொண்டு திகழ்கின் றது. செருக்களத்தில் ஆயிரம் களிறுகளை வென்ற வேந்தனே அப்பரணியைப் பெறவியலும் என்பதே அவ்விதியாம். அப் பனுவலும் அத்தகைய மாமல்லனுக்கே புலவர் பெருமக்க ளாற் பாடப்பட்டது. ஆனால் இற்றைக்கு அப்பரணி விதி ஒத்து வருமா என்றால் இல்லை.

> *''ஆனை யாயிரம் அமரிடை வென்ற*
> *மானவனுக்கு வகுப்பது பரணி''*

என்ற விதிக்கேற்ப இனிச் செருக்களத்தில் ''ஆயிரங்களிறு களை வெல்ல இயலாது. களிறுகளோ பொருட்காட்சிப் பொரு ளாக அருகிவிட்டன. ஆதலாற் பரணி இலக்கியமே வேண்டா என்றால் அது நந்தமிழ் மொழிக்குப் பேரிழப்பாகும். ஆகவே அவ்விலக்கியத்திற் புதுமுறையைப் புகுத்திப் போற்றிக் காப் பது புலவர்தம் பெருங்கடனாகும். முடியரசிற்கேற்ப இருந்த அப்பரணி விதியைக் குடியரசிற்கேற்ப மாற்றியமைப்பது நந்தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணைபுரியும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

குடியரசு நாட்டில் அரசியல் கட்சிகளே தேர்தல் வாயிலாக ஆட்சியைக் கைப்பற்றுகின்றன. அக்கரணியத்தால் அவ்வர சியற்கட்சியை நடாத்துகின்ற தலைவனுக்குப் பரணிபாட் லாமா என்றால் பொருந்தாது. ஏனெனிற் பண்டிருந்த தமிழ்ப் புலவர்கள் அரசிருக்கையமர்ந்த வேந்தர்கட்கெல்லாம் பரணி பாடினார்களில்லை.

கீழேகண்டவாறு பரணியின் விதியை மாற்றிக் கொள்வது சீருஞ்சிறப்புமுடையதாக இருக்குமென்று நம்புகின்றேன். நந்தமிழ்ச் சான்றோர்கள் அஃதை ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்பி நவில்கின்றேன். நவின்றாலும் நற்றமிழை நன்கு கற்காத நான் நடுங்குகின்றேன்.

மேலும், பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழுக்குந் தமிழ்க் குமுகாயத்திற்கும் ஆற்றிய பணிகள் ஒன்றா? இரண்டா? அளவிட்டுரைப்பார் யார்தான் உள்ளார்? அத்தகைய அத் தொண்டனைப் பாடுவது நன்றியுள்ள தமிழனின் கடனா காதோ? அப்பெருமகனைப் பாட வாய்ப்பேற்படுத்திக் கொள் ளவே, இவ்விதியை இவண் கூறியுள்ளேன். புலவர் பெரு மக்கள், தெளிந்த மதியற்ற நான் கூறிய விதியிற் பிழை கண்டாராயினும் அறிஞர் அண்ணா அவர்களைப் பாடப் புகுவதாற் பொறுப்பார்கள் என்றே நம்புகின்றேன்; நம்பி நவில்கின்றேன்.

இனி எப்பிறவி எடுத்தாலும், எப்பொழுது எடுத்தாலும் அண்ணா அவர்கள் பிறக்கின்றபோது, பிறக்கின்ற இடத்தில் பிறப்பெடுக்க இறைவனை என்றென்றும் வேண்டி விதியை விளம்புகின்றேன்.

''நகர்மன்றத் தேர்தலிலோ, சட்டமன்றத் தேர்தலிலோ நாடாளுமன்றத் தேர்தலிலோ ஓர் அணியைச் சார்ந்தவர்கள் போட்டியிட்டுப், போட்டியிட்ட அத்துணைப்பேரும் வென்று

விட்டால் அவ்வணித் தலைவனுக்குப் பரணி பாடலாம். அவ்வணித் தலைவனையே பரணியின் தலைவனாகக் கொள் வது பொருந்தும். மேலும் அவ்வணியைச் சார்ந்தவர்கள் போட்டியிடுகின்றபொழுது, இம்மும்மன்றங்களில் ஏதாவது ஒரு மன்றத்தில் ஆட்சி நடாத்தி வருதல் வேண்டும். அங்ங னம் ஆட்சி புரிந்தாற்றான் அவ்வணியின் தூய பணியை மக்கள் உணர வாய்ப்பேற்படும். அவ்வாறுள்ள ஓர் அணியைச் சார்ந்த தலைவனை நம்பி மக்கள் அவ்வணியைத் தேர்ந் தெடுத்தால் அத்தலைவனுக்குப் பரணிபாடலாம்!

மேற்கூறிய விதிக்கேற்பப் பேரறிஞர் அண்ணாவின் திராவிட முன்னேற்றக் கழகம் சென்னை போன்ற நகர் மன்றத்தில் அரசு நடாத்துகின்றபோதே, நாடாளுமன்றத் தேர்தலிலும் போட்டியிட்டது. போட்டியிட்ட அத்துணைப் பேரும் வென்று, அவர்களில் அவ்வணியின் தலைவனும் வென்றால், என்னென்று எடுத்துரைப்பேன். இவ்வேற்ற தொரு வெற்றிதனை! பரணிபெறும் அணியின் தலைவனும் வென்றால் சிறப்பாகும்.

மேலும் அண்ணா அவர்கள் விலகித் தமிழக முதல்வராக அமர்ந்த பின்னர் நடந்த நாடாளுமன்ற இடைத்தேர்தலி லும், "அண்ணாவின்" அணியைச் சார்ந்தவரே வென்றமை யால், அண்ணாவைப் பரணியின் தலைவனாகக் கொள்ளுதல் சாலப் பொருந்துமெனக் கருதுகிறேன்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல"

[நன்னூல் 462]

என்று பவணந்தி முனிவர் யாத்த நூல் விதியின் துணை யோடும் இதனைச் செய்யலாம்.

மேலும்,

'முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி அழியா மரபினது வழி நூலாகும்' (நன்னூல்) என்ற இவ்விதியையும் தலைமேற் கொண்டு "பரணிக்கோர் சயங்கொண்டார்" என்ற சிறப்பைப் பெற்ற செந்தமிழ் ஆசானின் வழிநின்று "அண்ணா பரணி" யைப் பாடுவோம். வாரீர்!

இவண்,<br>
அன்பன்<br>
**ஆ. நாகராசன்,**<br>
31—5—1969

## அவையடக்கம்

பாரதியின் மறப்பாட்டும்; தாசன் யாத்த
பைந்தமிழே உயிரென்னும் உயர்ந்த பாட்டும்
போரதனை யெழுப்பிவரும் பட்டுக் கோட்டைப்
பொதுவுடைமைப் புதுப்பாட்டும்; கண்ணதாசன்
பேரதனை நினைவூட்டுங் காதற் பாட்டும்
பெருஞ்சுரதா முடியரசன் பாட்டுஞ் சேர்ந்து
சீரதனைக் கதிரொளிபோல் தந்து நின்றால்
தேய்நிலவாய் என்பாட்டும் ஒளிநல் காதோ? 1

இல்லையொளி நல்காதென் றியம்பின் ஒப்பேன்
ஏனென்றால் அன்னோர்தம் பாக்கள் கற்றே
சொல்லையழ காயமைத்துச் சுவையாய் அண்ணன்
தூய்பரணி பாடியுள்ளேன்; பிழையுண் டாயின்
பல்லையுடைத் தென்முகத்தில் உமிழ்க; ஆனாற்
பைந்தமிழை இகழாதீர்; சிறப்புண் டென்றால்
கல்லையெடுத் ததைச் செதிக்கித் தமிழன் னைக்குக்
கவினான சிலையெடுத்து வணங்கி வாழ்வீர்! 2

## க. கடவுள் வாழ்த்து

[பேரறிஞர் அண்ணு அவர்களின் பரணியைப் பாடப் புகுமுன் எம்முடைய தாயையுந்தந்தையையும் தகுந்த ஆசான் அ. கி. பரந்தாமனார் ஐயா அவர்களையும், தலையாய தலைவன் பேரறிஞன் அண்ணாவையும் வணங்குவோம் அதன்பின் நக்கீரனால் திருமுருகாற்றுப்படை நூலைப் பெற்ற தமிழ்க்கடவுள் முருகப் பெருமானை வணங்குவோம்! அடுத்து ஏசுவையும், நபிகள் பெருமானையும், புத்தரையும் வணங்வோம் பாருயர வள்ளுவர் மறையைப் பரப்புவோம்; வணங்குவோம்! ஐம்பெருங்காப்பியங்களிற் றலையாயதான சிலப்பதிகாரத்தை யாத்தளித்த இளங்கோவடிகளார் வணங்கும் பால்நிலாவை யும், பகலவனையும் வணங்குவோம். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த பெருமக்களை வணங்கி, மாந்தரின் உரிமைகள் சிறப்புறவும் வணங்குவோம்!

ஒற்றுமைக்கும், பொதுவுடைமைக்கும் உவகையோடு வணக்கம் சொல்வோம்! மறைகளை வணங் குவோம்! அண்ணாவை யகத்தே கொண்டு, பிறர்க்கென உழைப்பவர் பிறந்திடவணங்குவோம்!

## அக வாழ்த்து

பாக்கியமென் னன்பருமைத் திருத்தாயைப்
பணிந்திடுவோம் பரணி பாட்
யாக்கையினைச் சுமந்தளித்த யென்தெய்வம்
இவளன்றி யெங்கே யுண்டு ? 3

ஆலடியா ரென்னருமைத் தந்தையவர்
அடிவணங்கி அருமை அண்ணன்
காலடியில் பரணியினைக் களிப்புடனே
வைத்திடநாம் கரங்கு விப்போம். 4

பைந்தமிழின் பாவலராம் பரந்தாம
ஞரடியைப் பணிவோம் நன்ருய்
ஐந்தறிவிற் கடுத்தறிவை யடைய இலக்
கணத்தையவர் அளித்தார் அன்ரே! 5

ஒரு தலைவன் உளங்கவர்ந்த வுயர்தலைவன்
உலகுயர உழைத்த அண்ணன்
திருவடிகள் தமைவணங்கித் திருப்பரணி
தனையவன்மேற் செப்பு வோமே! 6

## புற வாழ்த்து

பெருமைமிகு முருகனது திருவடிகள்
தனைவணங்கிப் பிறர்க்கே வாழ
அருமைமிகு தலைவனண்ணா துரையிருந்த
அரசியலின் அழகைச் சொல்வோம்! 7

ஏசுவையும் நபியினையும் இனிய புத்தர்
நெறியினையும் இனிதென் றெண்ணி
மாசின்றி யொழுகியவன் தனைப்பாட
அவர்களையும் வணங்கு வோமே! 8

## வள்ளுவர் வணக்கம்

அறநெறி யுலகினில் வளர்ந்திட
அதன்பயன் புவியின ரடைந்திட
குறண்ணெறி பரப்புவோம்; வணங்குவோம்
கொடுஞ்செயல் அகற்றி நாம் ஒழுகவே! 9

## நிலவு வணக்கம்

இருக்கின்ற சிறுவொளியில் இருள் நீக்க
நினைக்கின்ற இனிய நல்ல
திருமதியின் பெருங்குணத்தைத் திரண்டெழுந்து
வணங்கிடுவோம்; செய்வோம் தொண்டு! 10

நிலவுதவ நினைப்பதுபோல் நிலமெங்குந்
தமிழ்பரவ நினைக்கும் அண்ணா
நலமிக்க பணிகளையும் நவில்தற்குப்
புவியினிலே நாளும் அஞ்சோம். 11

பகலவன் வணக்கம்

பயிர்கட்கும் உயிர்கட்கும் உயிரூட்டும்
பகலவனைப் பணிந்தே அண்ணா
துயிலாது புவிக்காற்றும் துணிவுள்ள
செயல்களைநாம் சுவையாய்ச் சொல்வோம். 12

பெரியோர் வணக்கம்

பிறர்க்குதவப் பிறந்துள்ளோம் எனவுதவும்
பெரியோரைப் பெரிதும் போற்றி
அறவழியில் அரசாளும் அறிஞனது
நெறிமுறையை அறைவோ மிங்கே! 13

நல்லோர் வணக்கம்

நெறிவழி யொழுகிடும் மகளிரை
நிறையறி வுடையநற் புலவரை
பொறிகளின் வழிபுகாப் பெரியரை
புகழ்ந்து நாம் பலமுறை வணங்குவோம். 14

### உழைப்போர் வணக்கம்

உழைப்பவர் நலம்பெற வணங்கியே
உழுபவர் நலம்பெற வணங்குவோம்
அழைத்தது முதவிட நினைக்கவும்
அழுபவர் சிரிக்கவும் வணங்குவோம் 15

### ஒற்றுமை வணக்கம்

நிலத்தினுல் நிறத்தினுல் மொழியினுல்
நெறியினுல் ஒழுகிடும் முறையினுல்
உலகினிற் பிரிவினை வளர்ப்பதோ
ஒருகுலத் தினரென மறப்பதோ? 16

### இதுவும் அது

உறவினை வளர்த்து நாம் உலகினில்
உடன்பிறந்த தவரென முழங்குவோம்
இறப்பதோ உறுதிஇவ் வுலகினில்
இணைவதே சிறந்தது மகிழலாம் 17

### பொதுவுடைமை வணக்கம்

இருந்திடும் பொருளெலாம் பொதுவென
இயம்பிய மனிதரை வணங்கியே
வருந்திருப் பொருளெலாஞ் சமமுற
வழங்கிடும் அரசினை வணங்குவோம், 18

## காந்தியார் வணக்கம்

காந்தியெனும் அருளாளன் திருவடிகள்
தனைவணங்கிக் கரிய காந்தித்
தீந்தமிழ்நற் பரணியினைச் சிறப்புடனே
இசைத்திடுவோஞ் சிறந்தோன் ஆமாம். 19

## வ. உ. சி. வணக்கம்

இமயமுதல் குமரிவரை இருந்தவரின்
விடுதலையில் இழிவைப் போக்கத்
தமதுயிரை மதியாது கலமோட்டி
சிதம்பரத்தைத் தலைமேற் கொள்வோம். 20

## குமரன் வணக்கம்

குருதியுள்ள வரைகரத்தில் கொடியிருக்கும்
எனவுரைத்த குமரன் வீரம்
பரிதியுள்ள வரையிருக்கும்! அவனையிங்கு
வணங்கிடுவோம் பரணி பாட.
21

## இலெனின் வணக்கம்

இலெனினென்போன் மலரடிகள் வணங்கியண்ணா
துரைபரணி இசைப்போம்; அண்ணா
சிலருழைப்பிற் பலருண்டு படுத்துறங்கும்
நிலைமாற்றத் தெரிந்தோன் ஆமாம்!

### கென்னடி, இலிங்கன் வணக்கம்

கென்னடியை வணங்கிடுவோம்; அதற்கு முன்நாம்
இலிங்க னென்னும் சீர்த்தி மிக்கோன்
பொன்னடிகன் தனைவணங்கி அடிமைகொளல்
தவறென்போன் பரணி சொல்வோம். 23

### மறைகளின் வணக்கம்

குறண்ணெறி குரான்நெறி விவிலியம்
கொடுத்திடும் நெறிவழி ஒழுகுவோம்
பிறமறை பகர்ந்திடும் நெறிகளும்
பெரிதென மதித்துநா மொழுகுவோம். 24

### உரிமை வணக்கம்

அறநெறி புவியினிற் சிறக்கவே
அறிஞரின் பரணியை முழங்குவோம்
சிறப்புறும் மனிதரின் உரிமைகள்
திகழ்ந்திடும் புவியுமன் பினாலினி! 25

### நல்லவர் தோன்ற நல்வணக்கம்

பிறர்க்கென உழைத்திடு பெரியவர்
பிறந்திட இறைவனை வணங்கியே
மறக்கவே முடிந்திடா துழைத்துயிர்
மறைந்தவன் பரணியை முழங்குவோம். 26

# 2. கடை திறப்பு

[அண்ணாவை அரசிருக்கையில் அமர்த்தவிழைந்த இளந்தொண்டர்கள், சிற்றூர் முதற் பேரூர் ஈறுக அண்ணவின் தூய தொண்டையுந் திறத்தையுஞ் செப்பி வந்தனர். அவ்வாறு அவர்கள் செப்பி வந்ததால் இல்லத்தரசியைப் பிரிந்திருந்தனர். இல்லத்தரசியரோ கூடி மகிழாக் கொடுமையால் வாடி வதங்கிய, வண்ண மலரொத்திருந் தனர். இறுதியில் இளந்தொண்டர்களின் இனிமையான மெய்மொழியைச் செவியுற்ற மக்கள் அண்ணாவின் பேரணிக்கு வாக்களித்து அண்ணாவை அரசுக் கட்டிலில் அமர்த்தினர். அதன்பின்னே, வெளியூர்க்கு ஏகியிருந்த தொண்டரெல்லாம் வீடு திரும்பி வருவதாகவும் ஊடியிருந்த இல்லத்தரசியரைக் கூடிக் களிக்கக் கபாடங்களைத் திறக்கு மாறும் பாடப்பட்டது.]

## (மகளிரின் இயல்புகளைக் கூறி விளித்தது)

### முலையழகுஞ் சிகையழகும்

மலையினும் பருத்துள மலர்முலை
மயக்கிட் விழிகளிற் கருநிறம்
தலையினிற் சுருண்டுள கருங்குழல்
தரையினிற் படுங்கடை திறமினோ! 1

### முகத்தழகும்; உதட்டழகும்; உடலழகும்

நிலவினும் ஒளிமிகு குளிர்முகம்
நினைக்கவே இனித்திடும் உதடுகள்
மலர்புரை உடலுள மகளிரே
மகிழ்ந்திட் எழிற்கடை திறமினோ: 2

### நகைப்பழகு

உலகினிற் சிதறிய அழகெலாம்
ஒழுங்குடன் உடலினில் அமைந்ததால்
நலமிகு எழிலுடன் விளங்கியே
நகைப்பினுல் மயக்குவீர் திறமினோ! 3

### மகளிர் முத்தம் பெறும் விதம்

முத்தம் பெறவே கொழுநரிடம்
முதலில் அவர்முன் குழந்தைக்கு
முத்தம் இடுவீர் மயக்கிடுவீர்
முடிப்பீர் அவாவைத் திறமினோ! 4

### மகளிர் மனத்தன்மை

கூடி மகிழ உளந்துடித்தால்
குனிந்து நடப்பீர் கொழுநர்முன்
நாடி வராமல் அவர் சென்றால்
நவில்வீர் விழியால் திறமினோ! 5

### இதுவும் அது

பணிக்குச் செலவா எனக்கொழுநர்
பகர்ந்தால் விடையுஞ் சொல மாட்டீர்
மணிக்குள் வரவே தவறிவிட்டால்
வினவத் துடிப்பீர் திறமிமினோ! 6

### இதுவும் அது

கருப்புஞ் சிவப்புங் கலந்திருக்கும்
கலிங்கம் உடுத்திக் கவின்பெறுவீர்
விருப்பாய்க் கெழுநர் உமைநெருங்கும்
விளத்தம் அறிந்தீர் திறமினோ; 7

### குழந்தையின் உரையுங் கோதையர் நகைப்பும்

"அப்பா எதற்கு முகத்தினிலே
அணைத்துக் கடித்தார்" எனக்குழந்தை
செப்ப விரலால் எழில்வாயைச்
சிரித்தே அடைப்பீர் திறமினோ! 8

### அலையும் முலையும்

நடைபெறும் வளியினுற் கடலினில்
நடுங்கிய அலைபிற கெழும்புமே
இடையது நெளிந்திட முலைகளும்
எழும்புமே அலையெனத் திறமினோ! 9

### இளநகை

உளத்தினில் எழுந்திடுங் கருத்தினை
உரைத்திட மறுத்திடும் பவளவாய்
இளநகை புரிந்ததை மறைக்கவே
இளநகை புரியுவீர் திறமினோ! 10

### கரம்படப் புலம்பும் கன்னியர் செய்கை

தயங்கித் தயங்கிக் கொழுநர்முன்
தலையைக் கவிழ்த்தி நடந்திடுவீர்
புயத்திற் கொழுநர் கரம்படவே
புலம்பித் திகைப்பீர் திறமினோ; 11

### கொழுநர் பிசைந்தாற் கூடுமோ சுவையும்?

உணவை இடுவீர் கொழுநர்வாய்
உரைத்த பிறகும் மிகுதியென
கண:வன் பிசைந்த உணவுண்ணக்
கருதி இடுவீர் திறமினோ!

### மகளிர் மயக்கம்

காற்றுக் கபாட்ந் தனைத்தள்ள
கணவர் வரவோ எனவெண்ணி
மாற்ற அவிழ்த்த உடைமறந்து
மயங்கி வருவீர் திறமினோ ! 13

### மகளிர் துடிப்பு

விரிப்பை விரித்தே மணிப் பொறியில்
விழியைப் பதிப்பீர் அவர்க்காக
சுரிச்சென் றொலிக்க எலியொன்று
துடிப்பீர் திறந்தே திறமினோ ! 14

### முலைகளைச் சுமந்தே இளைத்தீரோ

குழந்தை வயிற்றுப் பசிக்குணவும்
கொழுநர் காமப் பசிக்குணவும்
வழங்கும் நகிலைச் சுமந்ததனால்
வாடி இளைத்தீர் திறமினோ! 15

### உமிழ்நீர் அமிழ்தோ!

துவையல் அரைத்து வயற்காட்டிற்
சுடுகூழ் தருவீர் கொழுநரதன்
சுவையில் உமிழ்நீர் வடித்திடவே
சுவைக்கத் துடிப்பீர் திறமினோ! 16

*கண்ணால் மயங்கவா அண்ணா விடுவார்!*

கண்ணாற் கொழுநர் தமைமயக்கிக்
கருத்தைத் திருப்பி மகிழ்வுறுவீர்
அண்ணா துரையோ அதையகற்றி
அளிப்பார் உணர்வைத் திறமினோ! 17

*எளியவரின் எழிற்கதவு இமைக்கதவே!*

தெருவிற் கலிங்க மனையமைத்துச்
சிறப்பாய் நடிப்பீர் விழிமூடி
பெருமை மிகுந்த விழிவீட்டின்
இமைக்க பாடந் திறமினோ! 18

*கொழுநரைப் புகழ்ந்தாற் கோதையர் மகிழ்வீர்*

தமிழின் உயர்வைத் தமிழ்ப் புகழைத்
தரையிற் புதைத்தோர் தமையெல்லாம்
உமிழ்ந்தார் புவியோர் உம்கொழுநர்
உழைப்பாற் கபாடந் திறமினோ! 19

*வள்ளுவர் வழியில் அள்ளுக சுவையை!*

வளியிடைப் புகாதுடல் களையமைத்திருந்துநீர்
மகிழ்வுடன் புணர்ந்திடக் கொழுநரும் மயங்கியே
தெளிவினை யிழந்துதம் திருக்கையாற் குழலினைத்
திருகியே வருடுவர் திருக்கடை திறமினோ! 20

*கொழுநர் பிரிதல் கொடுந்துயராமோ!*

அண்ணாதுரையை முதலமைச்சா
யமர்த்தப் புகுந்த வெழிற்கொழுநர்
கண்ணிற் படாது பிரிந்திட்வோ
கடையை யடைத்தீர் திறமினோ! 21

*கட்சுரிக் கடங்காக் கவின்நகில் பாரீர்!*

தலையினைக் கவிழ்ந்துநீர் நடந்திட்த்
தலையினைக் கவிழ்த்துவீர் மலைமுலை
அலைந்திடு மிருக்கியு முடையினால்
அதிர்ந்திட விடையது திறமினோ! 22

*அண்ணா மொழிக்கே கண் விழித்தீர்!*

இனிமை மிக்கசொல்லை அண்ணா சொல்லவதை
ஏற்ற நற்கொழுந ரியம்பவே
இனிமை காணயெண்ணி ஏக்கங் கொண்டுவிழித்
திருந்தீர் ஏன்நடிப்புத் திறமினோ! 23

*அசைந்திட அசையும்!*

உடையசையும் உடலசைய உலகசையும்
விழியசைய ஒடிதல் போன்றே
இடையசையும் முலைசைய துறவசையு
மெழிலசைய இனியேன் திறமின்! 24

### *நடிப்பதை நவிலும் நற்பூச்சி*

பொய்த்துயில் கொண்டுவிழி பூவிதழ் போலமைத்த
புகழ்பெறு நாடகத்தின் புகழினைப் போக்கவைத்தே
மெய்த்துயில் இல்லையென மேனியைத் துன்புறுத்தும்
மிகச்சிறு மூட்டையது விரைந்துநீர் தாழ்திறமின் 26

### *கோழியை விஞ்சுவர் கோதையர் என்றும்*

விரட்டிட் விரட்டிட விரைந்தகோழியதுவும்
விருப்புடன் புணர்ந்துபின் விசிறிடு மிறக்கையை
விரட்டிடாப் பொழுதினும் விருப்புடன் புணர்ந்து நீர்
விலாவினிற் றடவுவீர் விழிக்கடை திறமினோ! 26

### *பணியினைச் செய்யும் துணிவினன் அண்ணா*

புலவோருள வவையாயினும் புதுமைக்கருத் துரையை
நிலவாய்ஒளி குறையாக்கதிர்த் தெளிவாய்த்துரை
தருவான் 27

### இதுவும் அது

தருவான்துரை தருவான்மனந் தளரான்புகழ்
விரும்பான்குலம் வருந்தின்
வருவான்துரை வருவான்குலம் வளர்ப்பான் மனம்
மகிழ்வான்கடை திறமின்! 28

### *அன்று போல் இன்றுமா?*

அன்னை மார்பகத்தில் அன்றிருந்ததுபோல்
அத்தான் மார்பகத்திற் சாய்ந்துள்ளீர்
அன்னை யானபின்னும் சாய எண்ணுவீரோ?
அறைந்தே பொற்கடைகள் திறமினோ!

*நகைப்பில் நடுங்கா நற்படை உண்டோ?*

பகைத்த கொழுநர் தமைநீவிர்
படையில் உயர்ந்தே இருந்தாலும்
நகைத்தே மயக்கித் திருப்பிடுவீர்
நகைக்கக் கபாடந் திறமினோ! 30

*போதுமென்ற பொன் மனம் உண்டா?*

வாயுஞ் சிவக்கக் கொழுநரவர்
வழங்கப் பெறுவீர் பலமுத்தம்
காயும் உதடோ அதன்பின்னுங்
களிக்க நினைப்பீர் திறமினோ! 31

*இறந்த உடல் எழுந்திடுமே!*

மிஞ்சி தனையணிந்தே அஞ்சி நடைபயிலக்
கொஞ்சும் ஒலியெழுப்பும் மிஞ்சியும்
துஞ்சு முடலதனின் நெஞ்சில் அவாவெழும்பக்
கொஞ்சு முயிரடைந்து திறமினோ! 32

*அவ்வெழில் உரையாற் கவ்வுவீர் துரையை*

தண்மொழி கூறுவான் வாயினால்
தார்மலர் தந்திடுந் தேனினும்
கண்களில் நற்றுரை மேனியைக்
கவ்வுவீர் பொற்கடை திறமினோ! 33

### வரையப் படத்தை உரையை இழந்தீர்

துரையவ னவையினி லுரைதர வருவனேல்
துரையுரைச் சுவை பெற நினைத்துநீர் குழுமுவீர்
தரையினி லவன்முகந் தனைவரைந் ததில்மனந்
தனையமைத் துரைச்சுவை யிழந்துளீர் திறமின் ! 34

### நெறிநின்ற இளைஞரெலாம் வெறிகொண்டார் உம்மாலே

தலையிற் கருங்குழலுங் குழலி லெழில் மலரும்
தனித்த மணமதிலுந் தோன்றவே
நிலையிற் கடையிலுள்ளார் நினைவை யிழந்திளைஞர்
நெறியிற் பிறண்டுலகில் திறமினோ! 35

### இடைக்கொடி சுமக்குமோ இப்பெரும் முலைகளை

சுரைக்கொடி காயொடு கூரையிற்
றொங்கிடா துள்ளதே வும்மிடை
நிறைக்கொடி மேன்முலை தொங்கினால்
நிலைக்குமோ நீள்கொடி திறமினோ! 36

### வீட்டுப்புள்ளா? கூட்டுப் புள்ளா?

வீட்டின் வெளியே தலைநீட்டி
விரும்பிக் கொழுநர் வரவறிதல்
கூட்டின் எழிற்புள் தலைநீட்டுங்
குணமும் பொருந்துந் திறமினோ! 37

### இரவுநடையாற் குருதிவடியும்

வருவார் வருவார் எனயேங்கி
வருவீர் வெளியே திரும்பிடுவீர்!
ஒருநாள் இரவும் நடக்கத்தாள்
உதிர்க்குங் குருதி திறமினோ! 38

### தேர்தல் பாடுவோந் திறந்திடுமின்கடை

மாட்டின் அரசு மடியப் பகலோன்
மணமாய்ப் புரிய மகிழ்வாட்சி
ஏட்டிற் கதிரைத் தெளிவாய் வரைந்தீர்
தேர்தல் பாடத் திறமினோ! 36

### அன்னோர் அகல அமர்ந்தான் அண்ணா!

முரசில் அமைச்சர் முறையில் பணியை
முழுது முரைத்தான் துரையண்ணா!
அரசின் இருக்கை யமர்ந்த வமைச்சர்
அகல வமர்ந்தான் திறமினோ! 40

### ஊடிய விழியால் ஓடிடுங் கண்ணீர்

ஊடி வாழ்ந்தநிலை என்று மில்லையென
ஓத உங்களது பொன்மனம்
ஓடி வந்தொழுகும் உங்கள் மீன்விழியில்
உவர்நீர் பொற்கடைகள் திறமினோ! 41

தொடாமல் இன்பம் படாதே நெஞ்சில்

கட்டி வைத்ததனாற் வளியும் பட்டிடாமற்
கவினா யுள்ளதுங்கள் பொன்முலை
தொட்டி டாமலதை வருமோ மாமகிழ்வு
சொல்லி நற்கடைகள் திறமினோ! 42

காதற் சுவையைக் கவின்சொல் வெல்லும்

அண்ணா மேடையினில் அறையுஞ் சொற்சுவையை
அறிந்தால் அன்று முதல் நாணுவீர்
பண்பா யாண்டிடுவான் பணிவாய் யாரிடத்தும்
பகர்வான் எம்மொழியுந் திறமினோ! 43

கார்குழலின் சீர் மயக்கும்

உங்கள் கார்குழலை யுயர்வாய்ப் பின்னியதில்
ஒளிய வைத்திடுவீர் கலையை நீர்
எங்கள் நெஞ்சமதோ இளகு முங்குழலா
இயம்பு மென்னவென்று திறமினோ! 44

துரையிடமிருந்து விரைவாய்க் காப்பீர்!

விரைவாய் வந்துதாழை விலக்கி யும்மவரை
விருப்பாய்க் கொண்டு செல்வீ ரில்லையேல்
துரையால் மெய்மறந்து மதியுமின்றியவர்
தொலைப்பா ரும்முறவைத் திறமினோ! 45

## ந. நாடு பாடியது

(உறுபசியும், ஓவாப்பிணியும் மக்களை வாட்டிற்று. தமிழ், தமிழன் என்ற உணர்வற்றோர் அரசு புரிந்தனர். விருதைச் சங்கரலிங்கம், திருச்சி சின்னச்சாமி போன்ற மறத்தமிழர்களும், மாணவர் குமுகாயமும் செத்தழிந்தது. மொத்தத்தில் நாட்டைக் கேடு சூழ்ந்து இருந்தது. வடவர் இந்தியைப் புகுத்தத் துடித்தனர். தமிழ் நிலத்தில் அரசு புரிந்தோர், அதற்கு ஆவன செய்தனர். தமிழர், தமிழகம் பிரியுமென்றுரைத்தனர். உணர்ந்தோ, உணராமலோ தமிழர்களே தமிழின் தகுதியைத் தாழ்த்திய நிலையில் நாடிருந்தது. தமிழ் உணர்வையுந் தமிழன் என்ற உணர்வையுந் தமிழகத்தில் வளர்த்த ஒரே தலைவன் நம் பரணியின் தலைவனே! களப்பிரரைவென்று கனித்தமிழைக் காத்த "கடுங்கோன்" போல் அண்ணா எழுந்தார்.)

வளத்திற் சிறந்த தமிழ்நாட்டில்
வறுமை புகுந்த நிலையெண்ணி
உளத்தால் வருந்தி மிகநொந்தே
உயர்ந்த நாடு பாடுவோம் 1

*நட்பிழந்தார்*

தமிழீன் நாட்டையோ தாமிங் காள்கையில்
தமிழின் நட்பையே விட்டதால்
தமிழன் நாட்டையோ தக்க மேன்மையிற்
ரூழ்ந்த தன்மை சூழ்ந்துள்ளதே ! 2

*ஒரே பண்பினர்*

அடித்த போதிலும் போட்டி யிட்டதாற்
ரூேற்ற போதிலுஞ் செந்தமிழ்ப்
படித்த தாற்றமிழ் நாட்டிற் ரூேன்றிய
பாங்கால் நாமொரே பண்பினர் 3

*பாடுபட்டோர் வாடுதல் நன்றோ?*

பாடுபட்டவர் பாங்கா யுண்ணுநற்
பண்பு நாட்டினிற் கெட்டதால்
வாடும் மக்களோ பட்ட பூங்கொடி
வண்ணம் நின்றனர் உண்மையே !

*காளையர் நொந்தனர் அன்னையர் மாண்டனர்*

கற்ற காளையர் பெற்ரு ரில்லையோர்
வேலை யாதலால் நொந்தனர்
பெற்ற அன்னையர் பண்டம் வாங்கையில்
ஏற்றங் கண்டுயிர் போக்கினர். 5

*மாணவர் குரலில் ஆடிய தில்லி*

எங்கள் செந்தமிழே எங்கள் நாட்டையாள
என்றும் வேண்டுமென மாணவர்
பொங்க நற்குருதி சொன்ன சொல்லதனால்
தில்லி யாடியதும் மெய்மையே! 6

*சட்டத்தை எரித்தனர் செந்தமிழ் காக்க*

இந்தி இந்தியாவை யாளு மென்றிருந்த
இன்னற் சட்டமதைப் போக்கவே
செந்தீ கொண்டெரித்தார் மல்லர் காமராசர்
சேர்ந்தார் காளிமுத்துங் கூடவே! 7

*சின்னச்சாமி தீயாற் சிதைந்தான்*

சின்னச் சாமியென்போன் போக்கித் தன்னுயிரைத்
தீயாற் செந்தமிழை வாழ்த்தினன்!
சின்னச் சாமியைச் செய்த நற்றிருச்சிச்
செப்பு மன்னவனின் பேரையே! 8

### ஆண்டோர் அணியினைச் சார்ந்தோன் மாண்டான்

மாட்டின் ஆட்சியினை மாண்பாய்ப் பேணியவன்
மல்லன் மாவிருதை தந்தவன்
நாட்டின் நற்பெயரை நாளும் நம்மொழியில்
நன்றாய்ச் சொல்ல உயிர் விட்டனன் 9

### இதுவும் அது

மல்லன் சங்கரநல் லிங்கன் மாத்தமிழோ
வாழ உண்டியுண்ணாத் தன்மையால்
நல்லன் தன்னுயிரை நாண மாட்டியக்கம்
நல்கி வாழுகின்றான் நாட்டிலே ! 10

### தன்னுயிர் போக்கித் தண்டமிழ் காத்தான்

சிவகெங்கைத் திருமண்ணிற் பிறந்தெழுந்து
தமிழ்மொழியின் சிறப்பைக் காக்கத்
தவமகனாம் இராசேந்தி ரனுமுயிரைச்
சுடுபட்டுத் தவிர்த்தான் ஐயோ ! 11

### அண்ணா அணியார் ஆர்த்தெழுந்தனரே

திராவிடமுன் னணிக்கழகம் தமிழ் காக்கப்
பெரும்படையாய்த் திரள ஆண்டோர்
இராராகித் தமிழ்ப்பற்றே அவர்களைவெஞ்
சிறையிலிட்டார் ; இழித்தா ரந்தோ ! 12

### அண்ணா கழகம் அளித்த ஈருயிர்கள்

தாளமுத்து நடராசன் தமிழுக் காகத்
தமதுயிரை யிழந்தவர்கள் ! நந்திக்குப்பின்
நாளதெல்லாந் துரையண்ணா இயங்கஞ் சார்ந்து
நடுமார்பிற் சுடுபட்டு நிலைத்தார்மண்ணில் 13

அண்ணாவோ தமிழ் வாழ
அரும்பணிகள் புரிந்ததனைக்
கண்ணாரக் கண்டவர்கள்
கடைப்பிடித்தார் அவர்நெறியை ! 14

### அரிசியென்ற அருச்சுணன் மறைந்தான்

அரிசிவா அரிசிவா எனவிருந்
தரிசிவா வரிசிவா வெனச் சொலின்
அரிசிதான் வரும்வழி எதுவென
அறைந்தனன் அருச்சுணன் அழித்தனர் 15

### வறுமையின் கொடுமை

வறுமையினாற் பலரிறந்தார் மொழியைக் காக்க
மனந்துடித்தோர் பலரிறந்தார் அரசாண்டோரின்
பொறுமையிலா நிலையதனால் அருச்சுனன்றன்
புகழுடலைச் கடச்செய்தார் அவனும் செத்தான் 16

## இதுவும் அது

எளியவர்கள் அரசிருக்கை யடைவ தென்றால்
இயலவில்லை பொருள் நிறைந்தோர் எதிர்ப்பாற் சூளு
வளியிடையே யகப்பட்ட சிறுதூ ளாக
வலிவிழந்தார் உணவின்றி வருந்திச் செத்தார் 17

*தமிழ்நாடு எனும்பெயரைத் தாரீர்! என்றான்*

தமிழண்ணா துரைகழகம் தமிழைப் பேணும்
தமிழரசுக் கழகமுடன் இனியும் மற்ற
தமிழநாட்டின் தலையாய கழக மெல்லாம்
தமிழ்நாடு பெயர் வேண்ட மறுத்தார்
ஆண்டோர் 18

*விலையுயர்வென்றாற் குலைநடுங்காதோ!*

விம்மி விம்மி எளியவர்கள் விழுந்தார் செத்தார்
விலையேற்றந் தனைக்கண்டு விருப்பில்லாமல்
தம்மனத்துள் வெந்துவெந்து மகிழ்வுமின்றி
தள்ர்ந்தநடை மெலிந்தவுடல் தனைத்தான்
பெற்றார் 19

*தண்டனை தந்தார் தமிழடியார்க்கே!*

துறவியெலா முணவுண்டுண் டுறங்கும் நாளில்
தூயகுன்றக் குடியடிக ளாரென் போரோ
குறளறத்தைப் பரப்பிவந்தார் அவர்மேற் கூட
கொடியபழி சுமத்தித்தன் டனையீந் தாரே! 20

## இதுவும் அது

மறைமுகமாய்ச் சதிசெய்தார் அடிகள் என்று
வழக்கிட்டார் ஒறுப்பதற்கே மனத்துளெண்ணி
முறைகேடாய் பொருளைத்தண் டனையாய்ப்பெற்றார்
முனுமுனுத்தார் தமிழ் நாட்டார் துடித்தார்
நொந்தார் 21

## வெறுத்தொதுக்கிப் பொதுமக்கள் வெறுப்பைப் பெற்றார்

திருச்சியிலே பிறந்தெழுந்த விசுவ நாதம்
திடுக்கிட்டார் ; சிறப்புவிக்கத் தமிழைத் தாமும்
விருப்போடு சிறைசென்றார்; தமிழென்றாலே
வெறுத்தொதுக்கிப் பொதுமக்கள் வெறுப்பைப்
பெற்றார் 22

## புரிந்தாரில்லை

தில்லியினர் இழிமொழியைச் சதிசெய்து
தமிழகத்தில் திணிப்ப தற்குப்
புல்லறிவை யுடையதமிழ் அமைச்சரெல்லாம்
துடிதுடித்தார் புரியா தந்தோ! 23

## சாவது உறுதி தனிப்புகழ் பெறுவோம்

சாகும் போதிலுந் தமிழை வாழ்த்தினர்
சாகப் போவதை கண்டா ராயினும்
போகும் இவ்வுயிர் என்று மாதலால்
போனா லென்னவின் றென்று கூறியேj 24

## தொண்டால் வந்த துன்ப மின்பமே!

வாழ்ந்த வாழ்வினிற் மாண்பைக் கண்டிட்
மக்கள் போற்றிடத் தொண்டுசெய் குணஞ்
சூழ்ந்த நெஞ்சினர்! துன்பங் காண்பதைத்
துன்ப மன்றென வந்தார் சொல்லியே! 25

## சுடுசுடென்று சூளுரைத்தார்

வடநாட்டார் சதி செய்தார்
மதியில்லாத் தமிழமைச்சர்
சுடவரவே, சுடுசுடென்று
சூளுரைத்தார் மாணவரே! 26

## இதுவுமது

பறவைகளைச் சுடுவதைப்போல்
பதவியிலே அமர்ந்ததனால்
மறவரையோ சுடப் புகுந்தார்
மதியில்லார் மறைவதற்கே! 27

## படந்தாழ்ந்த பாம்பானீர்

வடநாட்டான் அளிப்பானோ
வாக்கதனை தில்லியோர்முன்
படந்தாழ்ந்த பாம்பானீர்
பதவியெங்கள் கையிலுண்டே! 28

பதவி யார் — கைத்துப்பாக்கி

அரிசியென்றாற் றுப்பாக்கி
அருந்தமிழின் வாழ் வென்றாற்
பரிசுதருந் துப்பாக்கி
பதவியார்கைத் துப்பாக்கி? 29

## ச. தலைவனைப் பாடியது

(தனது நலத்தையுங் குடும்ப நலத்தையும் மறந்து தமிழகத்தை உயர்த்த வந்த ஒரே தலைவன் அண்ணா! அவன் எழுத்தாற்றலையும், பேச்சாற்றலையும் எல்லா வற்றிற்கும் மேலாக தூய தொண்டுள்ளத்தையும் பெற்றிருந தான்.

தனது நலங் குடும்பநலந் தனைமறந்தே
புவியுயரத் தவித்த அண்ணா
மனவெளுப்பை மதிவெளுப்பைப் பணிவெளுப்பை
நெறி வெளுப்பை வரைவோ மிங்கே! 1

கரியநிறம் அரியமனம் தெளிந்தமதி
யருங்குணங்கள் கலந்த அண்ணா
புரிந்த பெரும் பணியனைத்துந் தமிழுக்கே
தமிழர்க்கே புகலுவோமே! 2

*அண்ணன் பன்னிய பொன்மொழி*

கடமைகண்ணி யங்கட்டுப் பாடென்னும்
கருத்ததனைக் கவியனாய்த் தந்தே
மடமையினை யொழித்துவந்தான் மதிபெருகத்
துணைபுரிந்து மகிழ்வுற் றானே! 3

*உயிரகன்றாலும், உழைப்பான் நன்றோ!*

தமிழ்நாடுந் தமிழ்மொழியுந் தமிழ்க்குடியுந்
தரனியிலே தழைக்க அண்ணா
உமிழ்ந்தாலும் பிறரவனின் உயிரழிக்க
நினைத்தாலும் உழைத்தான் நன்றே! 4

*கல்கியின் கூற்று*

நாடகங்கள் மாண்டுவிடும் தமிழில் அந்தோ
நாமென்ன செய்திடுவோ மென்று நொந்தேன்
ஈடற்ற எழுத்தாளன் அண்ணா என்போன்
இருந்ததையு மறியாமல் என்றான் கல்கி 5

### ஆங்கில உரையைத் தமிழ்ப்படுத்தியது

திருச்சிதந்த தமிழ்வேங்கை விசுவ நாதம்
செய்தமைத்த ஆங்கிலத்தின் அரங்கங் கூறுங்
கருத்ததனைத் தமிழ்படுத்தக் கற்றோ ரெல்லாம்
கலங்கிடவே மொழிபெயர்த்தோன் கரியன்
அன்றோ 6

### சொல்லிய சொல்லால் தில்லியர் மயக்கம்

பாராளு தில்லிமன்றிற் குறித்த நேரம்
பாங்குடனே பேசிட மதுதான் சட்டம்
சீரான பேச்சாலே யந்தச் சட்டம்
செத்திடவே அண்ணாவாற் சிலையா
னார்கள் ! 7

### வெற்றிக்குத் தகுந்தது நற்றுரை பேச்சே

வால்டேரும் வருசோவும் பிரஞ்சு நாட்டில்
வளமிகுந்த எழுத்தாளர் எனச்சொல் வார்கள்
வீழ்ந்திருக்குங் கோழையையுந் தட்டித் தூக்கி
வெற்றிக்கு வழிவகுப்ப தண்ணா பேச்சே ! 8

### இதுவும் அது

தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்கள் எனுமிச் சொல்லும்
தமிழகத்தில் எழுந்திடுதல் முறையோ யென்று
தாழ்ந்தமதி படைத்தோர்க்குஞ் செல்வர் கட்கும்
சாவதற்குந் தயங்காமல் உரைத்தேன் அண்ணா ! 9

*பித்தென மாற்றுவான் பேரெழிற் பேச்சால்!*

பெண்ணவளின் மீதுபித்தாய் மாறிடுவார் என்றே
பேசியதை யிவ்வுலகில் முன்பிருந்தே கண்டோம்
எண்ணமதிற் றோன்றுமெழி லின்மொழியிற் பித்தாய்
இன்றிருக்கக் கண்டுவிட்டோ மண்ணனவ
னாலே! 10

*அன்பது பொங்க ஆண்டனன் நாட்டை*

இங்கருசால் சேக்சுபியர் ''சா'' விவர்கள் போல
ஏற்றமுற்றான் நாடகத்தால் அன்பவனின் நெஞ்சிற்
பொங்கிடவே நற்றுரைதன் பெற்றமண்ணை யாண்டான்
பொன்னெழுத்தால் வந்தவனோ தோற்றுவிட்டார்
அன்னோர் 11

*பெற்றான் பொருளைப் பேசியே யுலகில்*

பேச்சதற்கே யிவ்வுலகில் நற்பொருளைப் பெற்றோன்
பேரறிஞன் அண்ணனன்றோ மாற்றுக்கட்சி
மக்கள்
ஏச்சதற்கு மஞ்சிடாமல் எப்பணியுஞ் செய்யும்
எந்தலைவன் போலொருவன் இவ்வுலகிற்
றோன்றான் 12

*அண்ணாவின் ஆற்றல்*

நல்ல ஓவியங்கள் தீட்டு மாற்றலுள்ளோன்
நாட கங்களைத்தான் தீட்டியே
எல்லாம் கற்றவர்கள் ஏத்தத் தான்நடிப்பான்
இன்பங் கொண்டவனை வாழ்த்துவர். 13

### இதுவும் அது

மாற்றுக் கட்சியினைச் சார்ந்த மக்களையும்
மாண்பாய்ப் பேசுகின்ற தன்மையால்
மாற்றித் தன்நெறியைப் போற்றிக் காப்பதற்கு
வாயிற் றூய்மையினைக் கொண்டுளான் 14

### பிறரை மதிக்கும் பெருங்குணக்குன்று

மாற்றான் வீட்டினிலே பூத்த மல்லிகையும்
மாண்பாய் நன்மணத்தை யீயுமென்
றேற்றான் மாற்றணியின் ஈடில் நற்கருத்தை
என்றும் மாற்றணியைப் போற்றியே ! 15

### இதுவும் அது

யார்சொல் என்றெதையு மாய்தல் நல்லதல்ல
என்ன சொல்லியுள்ளார் என்பதே
சீர்சால் நல்லறிஞர் ஆய வேண்டுமென
செப்பி யாய்ந்தெடுத்தோ னண்ணனே! 16

### பிறர்க்கென உதவும் பெருமனமுடையோன்

ஏணி நின்றவிடந் தன்னில் நின்றபடி
ஏற்றும் மற்றவரை, யேணிபோல்
பேணி மற்றவரை ஏற்ற எண்ணியதாற்
பேரி யக்கமதைத் தோற்றினான். 17

*வாக்குத்தாளா ? கருவேப்பிலையா ?*

வாக்குத் தாளதனை வாங்கி யாளவந்தோன்
மக்கள் எண்ணமதை விட்டிடின்
மூக்கின் நற்சுவைக்கே இட்ட நற்கருவேப்
பிலையை யொக்குமது தீயதே. 18

*பாட்டைக் காட்டி ஊட்டினன் வீரம் !*

நாட்டைத் தாக்கவரும் நச்சுக் கூட்டமதை
நாளும் வென்றிடவே சங்க நூற்
பாட்டைக் காட்டிமற மூட்டிக் காளையரை
பாங்காய் மாற்றியவன் அண்ணனே! 19

*அண்ணனின் திறத்தால் அழிந்ததே இழிவு*

சாதி யென்றுபெயர் சாற்றி வாழ்பவரின்
சங்கை வந்தறுக்கும் வாயுரை
நீதி சாகுமெனின் நெஞ்சை வந்துறுத்தும்
நீண்ட அண்ணனவன் கூத்ததே! 20

*இதுவும் அது*

பேசுந் தாய்மொழியைப் பேணிக் காத்ததுடன்
பேணச் செய்தவனு மண்ணனே !
கூசுந் தன்மையுள்ளோர் கூசி யஞ்சுவதைக்
கூடா தென்றவனு மண்ணனே! 21

—அண்ணா கூட்டம் அஞ்சாக் கூட்டம்—

தாயைத் தாய்மொழியைத் தண்மைத் (தாய்
(நிலத்தை)
தாங்கிக் காப்பதண்ணா கொள்கையே
வாயைக் கொண்டதனைத் தூற்ற வந்தவனின்
வாயிற் குத்துமண்ணா கூட்டமே! 22

—அண்ணா தாய்மொழியில் கற்றது—

தன்னைத் தூற்றுபவர் தம்மைத் தாக்க அண்ணா
தங்கத் தாய்மெழிாயிற் கற்றிலன்
தன்னைத் தந்தினத்தின் தாழ்வைப் போக்கவழி
தங்கத் தாய்மொழியிற் கற்றதால்! 23

—அண்ணனின் கூத்தில் அமைந்துள்ள பெருமை—

வாழ நல்வழி காட்டி நல்லவனாய்
வாழ்ந்தோன் நற்சிறப்பைக் கூறியே
தாழவுள்ளவரைத் தக்க நாடகத்தால்
தானே மாற்றுபவன் அண்ணனே! 24

—அணிவேறெனினும் பணியே குறிக்கோள்—

கட்சி வேறெனினும் நாட்டின் நன்னலத்தைக்
காக்கும் தன்மையினால் என்றும் நாம்
நட்பின் நல்வழியில் நாளுஞ் செல்லவுளம்
நல்கிச் சென்றவனும் அண்ணனே! 25

*—தமிழர் தம் மதமும்; மறையும்*

தமிழரெலாந் தமிழ்மதமே தமிழ் மதத்தின்
மறைகுறளே தமிழர் பண்போ
அமிழ்தைவிட யினியதுதான் அதையழித்தோர்
தமையழித்த அண்ணா வாழ்க!

## ரு. தொண்டர்களைப் பாடியது!

[தலைவனின் தூய தொண்டுள்ளத்தைக் கண்ட கோடித்தொண்டர்கள், அவன் அணிக்குத் தொண்டர்களாயினர். அத்தொண்டர்களில் பட்டறிவு மிக்கோரும், பட்டம் பெற்றோரும், கவிஞரும், கலைஞர்களும், கட்டுரை வேந்தர்களும் மிகுந்திருந்தனர். கல்வியறிவற்றோர் அண்ணனின் அன்பினாலும், பாசவுணர்வாலும் கட்டுப்பட்டுத் தொண்டாற்றித் தொண்டாற்றித் துரும்பாயினர்.]

பொன்னான குணமதனாற்
புவியுயர நினைத்துழைத்த
அண்ணாவின் கழகத்தில்
அமைந்ததொண்டர் தமைப்பகர்வாம். 1

*தலைவன் தம்பியென்றான் ! தொண்டர் அண்ணனென்றார்*

தொண்டர் என்ற சொல்லைத் தூக்கி வீசிவிட்டுத்
தூய தம்பியென்றா னண்ணனோ
கொண்ட பாசமதாற் கூறி யண்ணனென்றே
கூடித் தொண்டு செய்தார் தம்பிமார்

*— தொண்டர் பெருமை —*

அண்ணன் வாயுரையில் தம்பி மார்செவியும்
அண்ணன் கால்வழியிற் கண்களும்
பண்பாய் வைத்தவன்வாய் பன்னுங் கட்டளையைப்
பற்றாய்ச் செய்துவந்தார் நாளுமே ! 3

*—கண்ணாற் சொன்னாற் காற்றையும் பிடிப்பார் —*

அண்ணா சொன்னதைச் செய்வதே யின்பமாம்
அன்றே செய்திட வில்லையேற் றூங்கிடார்
கண்ணாற் பேசினாற் போதுமென் பாரவர்
காற்றைக் கைகளிற பற்றிவந் தீயவும் 4

## — ஓய்வற்ற உழைப்பு —

வாயாற் சொல்லுமுன் செய்திடும் பண்பினர்
வாழ்த்தும் வேண்டிடாத் தொண்டு செய்
நெஞ்சினர்
நாயாய் மாறுவார் நற்பணி செய்திட
நாளைச் செய்வதென் றின்றவ ரோய்ந்திரார் 5

## —தொண்டர்தம் செயலின் சிறப்பு—

அண்ணா இட்டதை யிட்டதுஞ் செய்து பின்
அன்பா லண்ணனைப் போற்றுவா ரில்லையேற்
கண்ணில் நீரினைக் கக்குவார் தீயரைக்
கண்டாற் கண்களை மூடிடுந் தொண்டரே. 6

## —இதுவும் அது—

ஏழை வாழ்வதற் கேற்றநற் றொண்டினை
என்றுஞ் செய்திட வேண்டுமென் பாரவர்
ஏழை வாழ்வதற் கெம்பணி யாதென
இன்றே சாற்றுநீ செய்யலா மென்பரே! 7

## —இதுவும் அது—

ஆளும் கட்சியிற் நீங்குகண் லானதை
அண்ணா மாற்றிடப் போரிடு வானவன்
நாளுஞ் செய்திடும் போரினில் வெற்றியை
நாடித் தொண்டரோ மாளவு மஞ்சிடார். 8

—இதுவும் அது—

பெற்ற நாட்டினைப் பேணுவார் பேசிடும்
பெற்ற நன்மொழி பேணுவார் தீங்கினை
கற்ற நாட்டினர் தந்திடின் வென்றபின்
வாழ்வார் இல்லையேல் மாண்டிடு வாரிவர். 9

—அண்ணா மீது அவர்களுக்குள்ள பாசம்—

அண்ணா வாழ்கவே வாழ்கவே என்றவர்
அன்பு பொங்கவே கூறுவர் அண்ணனைக்
கண்ணாற் கண்டிடின் பூவெனப் பொன்னெகைக்
கண்கள் நீரினைக் கொட்டவே கூறுவர். 10

—தொண்டர்தம் விழைவு—

சாதி மாளவும், ஏய்ப்பவர் வீழவும்
சான்று கொண்டிவர் மேடையி ற்கூறுவர்
நீதி வாழவும் நற்றமிழ் தாழ்ந்திடா
நீண்ட ஒற்றுமை சூழ்ந்திட வேண்டுவர். 11

—ஒற்றுமையோடு உரிமையைக் கேட்பவர்—

பண்பை விட்டொழி என்றுரைத் தொற்றுமைப்
பாங்கைப் போக்குவோர் என்றிவர் மேல்வரும்
இன்னற் கூற்றினைக் கூறுவோர் வாயினில்
இடிப்பர் அண்ணனோ கண்டிடாப் போதினில்! 12

*—கொள்கையைக் காக்க மாண்டிடுவாரே—*

குண்டாற் பொன்னுடல் துன்புறு மென்றுதாம்
கொண்ட பெண்டிரே கூறியும் போரிடக்
கொண்ட கொள்கையை நீக்கிடாற் குண்டினாற்
கொள்கை மல்லரோ மாண்டிட் எண்ணியே! 13

*—கொடிகள் பறக்கும் பாரீர்!—*

கூட்டம் போட்டிடின் அன்னவர் பொற்கொடி
கூரை மீதிலும் நீண்டம ரத்திலும்
வாட்ட மாய்ப்பறக் காதிருக் காதவர்
வானின் வெண்ணிலா வொன்றையே
விட்டனர். 14

*—அண்ணனைத் தாக்கின் அவர்விட மாட்டார்—*

தம்மைத் தாக்கவந் தாலவர் விட்டிடுந்
தன்மை பெற்றிருந் தாரவர் போற்றிடுஞ்
செம்மை யானநல் லண்ணனைத் தாக்கினால்
தீயாய் மாறியே கொல்லவு மஞ்சிடார். 15

— தோற்க அடிப்பார் தோல்வியே காணார், —

கட்டுப் பாடொடு கண்ணியங் காத்தவர்
கடமை செய்யவே எண்ணுவா ராயினும்
திட்டம் போட்டவர் செய்கையை மாற்றுவோர்
சிறிதும் வென்றிடார் அன்னவர் தோற்றிடார். 16

*— பணியினைச் செய்யுந் துணிவினைப் பார்ப்போம் —*

கல்லாய் மாறுவார் அண்ணனின் வாய்மொழி
காதாற் கேட்டிட என்றுமே; மங்கையர்
நில்லிங் கொன்றெழில் பொங்கிடக் கூறினும்
நில்லார் தம்பணி செய்யவே எண்ணுவார் 17

*— குடும்ப மென்றே கொண்டனர் கட்சியை —*

கட்சி யென்றவர் எண்ணிய தில்லையே
குடும்ப மென்றுதான் எண்ணினர் மெய்மையே
நட்பாய்க் கூடியே நாட்டினைப் பேணினர்
நடுங்கும் மக்களின் நற்றுணை யாயினர். 18

*— தொண்டே உயிரெனச் சொன்னவர் தொண்டர் —*

வாழும் நாட்களில் மக்களை இன்பமாய்
வாழ வைக்கவே எண்ணினா ராதலால்
சூழுந் துன்பமும் தூளென மாறிடத்
தொண்டில் தம்முயிர் வைத்தவர் வாழ்ந்தனர். 19

*— தம்தாயீன்ற தலைமகனென்றனர் —*

அன்னை தன்னையுந் தந்தையார் தன்னையும்
அன்பாய்ப் போற்றியோர் அண்ணனண்ணாவையும்
தன்னைப் பெற்றவள் பெற்றநற் பிள்ளையாய்த்
தமதுயிர் அண்ணனாய்க் கொண்டவர்
தொண்டரே ! 20

## சு. இயக்க வரலாறு

*[கழக வரலாறு]*

[தூய தலைவனின் கீழ் தொண்டாற்றித் தொண்டாற்றித் துரும்பான தூய தொண்டர்களின் தொண்டு வரலாற்றில் புகழப்பட்டது.]

ஆரியக்குடியின் தீச்செயலால் தாழ்ந்த தமிழர்
அடைய மேன்மையினை யெண்ணியொரு நல்லன்
[எழுந்தான்
வேரிற் பண்புநீரை விட்டுவளர்த் துள்ள மரந்தான்
விளங்கும் நற்கழக ஆட்சியதைக் கேளிர் தெளிவாய். 1

—தியாகராசனடிகளைப் போற்றித் தொழுவோம்—

செத்தார் செந்தமிழர் தீயவரின் தீய நெறியால்
தியாக ராச னெனுந் தீந்தமிழன் தோன்றி யதனை
கத்தி மேடையெலாம் மாற்றிவிட்டான் நல்ல நெறியில்
கனிவாய் அப்பெருமான் பொன்னடியைப் போற்றித்
தொழுவோம். 2

—தியாகராசன் எழுந்தான்—

செல்வம் மிக்கஅவன் செந்தமிழர் தாழ அறிந்து
சீசீ வாழ்வெதற்கென் றெண்ணியன்றோ தொண்டு
புரிந்தான்
கொல்வோம் தீயவரைக் கொன்ற பின்னே வாழத்தமிழர்
கொடுப்போம் நல்லறிவை யென்றுரைத்தான்
தொண்டிற் கிறந்தோன் 3

—துணிவுள்ள தலைவன் தொண்டரைச் சேர்த்தான்—

தொண்டில் எண்ணமுள்ள தூயவரைச் சேர்த்தான் முதலில்
துணிவாய் எண்ணுவதைக் கூறிவந்தான் மேடை
முழுதும்
பண்டைச் செந்தமிழர் வாழ்க்கையினைக் கூற அறிந்தோர்
பதறிப் பேரணியாய்க் கூடிவிட்டார் வீர மடைந்தே! 4

—தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் ஏற்படுத்துதல்—

சங்க மொன்றமைத்தார் நற்பணிகள் செய்யக் கருதி
தனது வாழ்க்கையினைச் சங்கமதிற் போக்கிக்
களித்தார்
தங்க நெஞ்சமுள்ளோர் சேர்ந்திருந்தார் அந்த அணியில்
தியாக ராசர்வழி செல்லமனங் கொண்டு துடித்தே! 5

—நீதியேடும், நயன்மைக் கட்சியும்—

நீதி யென்னுமொரு யேடெழுதி மக்கள் மனதில்
நிலைத்தார் இக்கழகத் தொண்டரெலாம் என்னை
எழுத்தோ
நீதி யேடதனால் நீதிக்கட்சி யென்றே யதனை
நினைத்த மக்களெலாம் போற்றிவந்தார்
நாளும் மகிழ்ந்தே

—ஆட்சியை அளித்தனர் அருந்தமிழ் மக்கள்—

போற்றி வந்த மக்கள் ஆட்சியையும் நீதி யணிக்கே
பொறுப்பாய் ஈந்துளத்தில் மாமகிழ்வு கொண்டு
சிறந்தார்
தோற்று வித்தஅவன் கட்டிலிலே ஏற மறுத்துத்
துணிந்த தொண்டரிடம் ஆட்சியினை யீந்து
மகிழ்ந்தான். 7

—உயிரை மதியா துழைத்தனன்—

மக்கள் வாழ்வுயர மாண்புடனே ஆட்சி யமைத்தோன்
மகிழ மக்களெலாங் கண்டதனால் உள்ளம் மகிழ்ந்தான்
"தக்கார்" என்ற பெயர் தாங்கியுள்ள தென்னர் தலைவன்
தனது பொன்னுயிரைத் துச்சமென எண்ணியிருந்தான்

—வெள்ளுடை வேந்தன்—

போற்ற வெள்ளுடையின் வேந்தனெனத் தென்னர் அவனை
பொறுப்பாய்த் தொண்டு செய்தான் தூயஇவன்
பேரைப் பகர
ஏற்றங் கண்டிருந்தார் என்று சொலின் இல்லை யதிலே
இம்மிப் பொய்யுரையும் மெய்ப்பணியாற் கண்டா
னுயர்வை. 9

— ஆன்றோர் பணிக்க அரசும் புரிந்தான் —

மீண்டு மிங்கெழுந்த தேர்தலிலும் மக்கள் மனதில்
மிகுந்த பேரடைந்த நீதியணி வெற்றி பெறவே
சான்றோர் நந்தியாக ராசனையே ஆளப் பணித்தார்
தகைமை யோடவனு மாண்டு வந்தான் நாட்டை
யெழிலாய் ! 10

— தமிழர் தொண்டையைக் காலான் நெறித்தான் —

நேர்மை யாக அவன் ஆண்டுவரக் காலன் அறிந்து
நெறித்தான் தென்னவரின் தொண்டைகளை எவ்வா
றெனின்நஞ்
சீர்த்தி மிக்கதியாக ராசனவன் மெய்யி லிருந்து
சிறந்த பொன்னுயிரைக் கொண்டு சென்றான் தென்னர்
துடித்தார் 11

— பனகலரசன் வருகை இராசன் ஆளுதல் —

பெற்றரன் அப்பொறுப்பை பனகலரசன் பெற்றுச் சிறப்பாய்ப்
பெரிதும் தொண்டுசெய்து மாண்டிடவே இராசன்
அதனபின்
வெற்றி பெற்றிருந்த நீதியணிக் கட்டில் அமர்ந்தான்
மிகவும் நற்பணிகள் செய்துவந்தான்மக்கள் மகிழ 12

*-பொப்பிலி அரசர் வருகையும் ; தந்தை பெரியார் வருகையும்-*

பொப்பிலி வேந்தனவன் நீதியணித் தொண்டர் விரும்ப
பொறுப்பைச் செய்திடவே நற்றலைவ னாக அமர்ந்தான்
ஒப்பில் நற்பணிகள் செய்தணியைப் பேணி வளர்த்தான்
உயர்ந்த தந்தைபெரி யாரதன்பின் வந்தார் அதற்குள்! 13

*—அண்ணா வருகை—*

அண்ணா பொப்பிலியார் ஆண்டபோது நீதி யணியில்
அமர்ந்து நற்பணிகள் செய்திடவே வந்தான் துணிந்து
கண்ணாய்ப்போற்றிவந்தான் தென்னவரின் வாழ்வை யறிஞன்
களித்தான் தென்னவர்க்குத் தொண்டுசெய் நாளு
மினிதாய்! 14

*—பெரியார் அணி—*

வைக்கம வீரரெனும் தென்னவரின் தெய்வம் பெரியார்
மதித்த காந்தியணி செய்தபல தீய பணியால்
தைக்கப்[பட்ட] முள்ளை நீக்குவதைப் போன்றே யகற்றி
தமிழர் ஏற்றமுற நல்லஅணி ஒன்றை யமைத்தார். 15

### பார்ப்பனர் கொட்டம் ஒடுக்கல்

காந்தியா ரணியாற் சேர்ந்தவர்கள் சாதிப் பயிர்க்குக்
களித்தார் வேலியிட்டே யென்றறிந்த தந்தை பெரியார்
காந்தி யாரணிக்குப் போட்டுவிட்டு வந்தார் முழுக்கை
கலகஞ் செய்து வந்தார் பார்ப்பனரின்
கொட்ட மொடுங்க! 16

### பெரியார் உரை

சாதி யென்றபயிர் ஏற்றமுடன் இங்கு வளர
தமது கண்களினாற் கண்டறிந்த தந்தை பெரியார்
நீதி யிங்கழிந்தாற் போர்க்களமா யிந்த நிலத்தை
நினைத்தே போர்புரிந்து வெற்றி பெறுவேனென்
றுரைத்தார். 17

### பார்ப்பனர் அஞ்சினர்

கற்கள் தெய்வமெனக் காட்சிதரக் கண்ட பெரியார்
கடிந்தார் அப்பணியைச் செய்துவரும் பார்ப்பான்
குலத்தை
சொற்கள் தந்தைபெரி யாரவரின் வாயில் வரவே
துடித்த பார்ப்பனரோ அஞ்சியொழிந்தாரே யவையில்! 18

— பெரியாரோடு அண்ணா சேர்தல் —

தந்தை நம்பெரியார் செய்துவந்த சாதி யொழிப்பைத்
தலைவன் அண்ணனண்ணா கண்டபின்னா
நீங்கி யிருப்பான் ?
எந்தம் நற்றலைவ ரிப்பெரியார் என்று பகர்ந்தே
இனிய நற்பணியைத் தந்தையொடு சேர்ந்து
புரிந்தான். 19

— பெரியார் மணமும், அண்ணா பிரிவும். —

முதிர்ந்தநிலை யடைந்தபெரி யார்மணமு
டித்திடவே பிரிந்தான் அண்ணா
அதிர்ச்சியுற்றான் மனம்நொந்தான் அதன்பின்னே
கழகமொன்றை யமைத்தான் கேண்மின் ! 20

— அரசு கட்டிலில் அமர்ந்தான் அண்ணா —

தந்தையினை பிரிந்துவந்தோன் தகைசான்ற
பொதுப்பணியால் தலைமையேற்றோன்
செந்தமிழ்நாட் டெழில்மக்கள் வாக்களிக்க
முதலமைச்சாய்த் திகழ்ந்தான் பாரீர் ! 21

—தந்தையைக் கண்டு தாள் பணிந்து எழுதல்—

முதலமைச்சாய் அமர்வதற்குத் தந்தையிடம்
ஆசிபெற்ற முறையைச் சொன்னால்
பதவியது வந்தாலும் வளர்த்தவரை
மதிக்கின்ற பண்பே தோன்றும் 22

—முதலமைச்சன்—

முதலமைச்சன் தமிழுக்கு முதலமைச்சன்
தமிழர்க்கு முறையா யாண்ட
முதலமைச்சன் தமிழ்நாட்டின் முழு அமைச்சன்
அறிஞரண்ணா வாழ்க! வாழ்க!! 23

—முதலியக்கம்—

தமிழுக்கு முதலியக்கம் தமிழர்க்கு
முதலியக்கம் தகைசால் அண்ணன்
அமிழ்தான பொன்னியக்க மஃதுயர்ந்தால்
தமிழ்ப் பண்பிற் கழிவே யில்லை. 24

—கழகத்தாற் றமிழர்க்கு மதிப்பு—

கழகத்தின் வரலாற்றை மிகச் சுருக்கிப்
பகர்ந்துள்ளோம் கழகத்தால் தான்
உலகத்தில் தமிழர்க்குப் பெரு மதிப்பு
வளர்ந்தோங்கும் உணர்வீ ராமாம்! 25

## ஏ. மக்கள் முறைப்பாடு

[அந்த எழின்மிக்க வரலாற்றை எழுதச் செய்த அண்ணாவைக் கண்ட மக்கள் முகிலிடமும், புட்களிடமும் முறையிட்டனர். ஏன்? அதைத்தான் நாடு பாடியதில் கண்டோமே! அத்துயர் நீங்க அண்ணா ஆட்சிக்கு வந்தால்.... என்று பெருமூச்சு விட்டனர்.]

யாரிடத்துஞ் சென்றுமுறை யிட்டிடாம லோடும்
காரிடத்தும் பாட்டிசைக்கும் புள்ளிடமு மிட்டார். 1

— மக்கள் புலம்பல் —

தொங்குகின்ற கொச்சை - மொழி
நாட்டையாளு மென்று
சொல்லுவதைக் கேட்ட - பின்னுந்
தொங்குகின்றார் பதவி
கிங்கிருந்து சென்றவரோ
என்றுமுறை யிட்டார்
என்னசெய்வோம் பொன்முகிலே
என்றதனைக் கேட்டே! 2

—இதுவும் அது—

முடியரசை யாங்கிலேயர் எழிலரசை
முறியடித்து முறையில் லாமல்
குடியரசு தனைவிரும்ப எரிகிறது
வளர்பசியாற் குருட ரானோம்! 3

இதுவும் அது

தேர்ந்தெடுத்த எங்களது சிரிப்பதனை
விரும்பாமற் றிரிதல் ஒக்கும்
சீர்க்காவல் புரிபவனே திருடுவதை
நெறிமறந்து தெளிவில் லாமல் 4

இதுவும் அது

வாக்கதனை யளித்தேமாட் டியக்கமதை
யரசாள வழிவ குக்க
தாக்கிவரும் பெரும்பசியாற் றளர்வுற்றோம்!
உடன் மெலிந்து தவிக்கின் றோமே! 5

—இதுவும் அது—

எறும்பிழுக்கும் துரும்பாக இளைத்துள்ளோம்
அரசாள்வோர் எவரும் வந்து
பொறுங்களெனப் பகர்வதற்கும் பொறுப்பிழந்து
திரிகின்றார் புலம்ப விட்டே! 6

—இதுவும் அது—

எலும்புமட்டு முடலினிலே இருப்ப தாலே
இயலவில்லை படுப்பதற்கும் படுத்தோ மென்றால்
புழுத்துள்ள விறகென்று கரையான் கூட்டம்
பொடிப் பொடியாய் எமதுடலை யரிக்கு மன்றோ! 7

இதுவும் அது—

வாக்களித்தோம் பொருள்வாங்கி யதனா லின்று
வதங்குகின்றோம் குடியரசின் மதிப்பை விட்டு
தீக்குள்ளே எரியவிட்டோம் இருந்தபோதும்
சிறுதுணையும் புரியாதோர் நிலைப்பாராமோ? 8

—இதுவும் அது—

பொருட்காக மதிமயங்கிப் புகழ் வாக்கை
யளித்தின்று புவியில் நாங்கள்
திருட்டுக்கு வழி வகுத்தோ மெனநினைத்து
வருந்துகின்றோந் திருந்தி விடடோம் 9

—இதுவும் அது—

தமிழர்க்கோ உயர்வில்லை தமிழுயர
வடவரெலாந் தடுக்கின்றார்கள்
உமிழ்ந்தாலுந் தமிழமைச்சர் உணர்வின்றி
வடவர் சொற் "கும்"மென் றாரே!

நந்திவர்மன் வாழ்க்கையினை நன்கறியா மூடர்
இந்திமொழி யாள்வதற்கே ஏற்றசதி செய்தார். 11

— இதுவும் அது —

மாடிவீட்டிற் குடியிருப்போ ருமிழ்ந்தாற் கக்கி
வயிறதனின் கொடும்பசியால் அதையும் உண்டு
வாடியிளைத் திருக்கின்றோம் முகிலே புள்ளே
வாழ்கின்றா ர் சுரண்டியிங்கே அரசாள் வோரே! 12

— இதுவும் அது —

கொன்றுவிடும் பெரும்புயலிற் பறக்கும் சின்ன
கொடியினங்கள் மெலிந்திருக்கும் நிலையால் நாங்கள்
தென்றலதே அடித்திடுமோ வெனத்து டித்துத்
திரிகின்றோ மனமஞ்சி முகிலே யென்றார்! 13

— கூட்டணித் தோற்றம் —

மாட்டணியை நல்லவர்கள் விட்டுவிட்டா ராலோ
• மாட்டணியைப் போக்கிடவு மெண்ணிவிட்டா ராலோ
கூட்டணியை யண்ணனண்ணா தோற்றிவிட்டா ராலோ
கூடிவிட்டார் நல்லவர்கள் அவ்வணியி லாலோ! '14

— கப்பலோட்டியார் பேரன் மாட்டணியை வெறுத்தல் —

செக்கிழுத்தார் பேரனவன் மாட்டணியை யாலோ
தீக்கிரையா யாக்கிவிட யெண்ணிவிட்டா னாலோ
தக்கமுத்து ராமலிங்கத தேவரணி யாலோ
தங்கமெனக் கூட்டணியை யெண்ணிவிட்ட தாலோ. 15

*—கூட்டணியில் ம. பொ. சிவஞானம்*

நல்லசிவ ஞானமவர் கூட்டணியை யாலோ
 நாடிவிட்டார் மாட்டணியை யோட்டிடவே யாலோ
நல்லவர்ரா சாசியும்ஆ தித்தனாரு மரலோ
 நல்லரசை யேற்படுத்த வெண்ணிவிட்டா ராலோ— 16

*மார்க்சியக்கம் இணைதல்*

என்றும் மண்ணை யாளவுள்ள மார்க்சியக்க மாலோ
 இவ்வணியிற் சேர்ந்ததென்றார் நீநிமித்த மாலோ
இன்றிசுமாய்ல் சாகிபிதிற் சேர்ந்துவிட்டா ராலோ
 இவ்வாசு மாண்டுவிடுந் தீநிமித்த மாலோ 17

*—கூட்டணியை நாட்டோர் விரும்பல்—*

காளையருங் கன்னியரும் மாணவரு மாலோ
 கால்பிடிக்கக் கூசவில்லை கூட்டணிக்கே யாலோ
தேளையவர் எண்ணுதல்போல் மாட்டணியை யாலோ
 தீயதென யெண்ணியதுந் தீநிமித்த மாலோ • 18

*— மாட்டணியார் நடுங்கல் —*

தமதணி பிறரணி என நினைக்கா தாலோ
 தகர்ந்திட எருதணி தவித்துழைத்தா ராலோ
எமதர சழிந்திட எவர்வருவா ராலே
 எனவுரைத் திருந்தவர் நடுங்கிவிட்டா ராலோ 19

—தேர்தலிலே பரணியுண்டு என்றறிதல்—

கார்முழங்கப் புள்ளொலிக்கக்
களிப்புடனே யறிந்தமக்கள்
தேர்தலிலே பரணியுண்டு
சிறப்புறலா மெனநினைத்தார். 20

— பசியின் கொடுமை —

புள்ளொலியோ உணவுவிலாப்
புடைக்க உண்ணா வியலுமெனச்
சொல்லுதல் போல் இருந்ததனாற்
றுள்ளிவிளையாடினரே ! 21

தலைவர், தொண்டர், இயக்க வரலாற்றை மக்களறிதல்

தலைவனண்ணா தகைமையயுந் தகுந்த தொண்டர்
அரும்பணியுந் தனதாய்க் கொண்ட
தலைவனண்ணா துரைகழக வரலாற்றைத்
தெரிந்தபின்னே தவித்தார் மக்கள் 22

அண்ணா அமைச்சராக இல்லையே எனமக்கள் வருந்தல்

அடுத்தமுறை யவனிடத்தி லரசையீந்தே
அகமகிழ அவர்நி னைத்தார்
எடுத்தபசி தனைநினைத்தால் எழிலமைச்சாய்
இலையண்ணா என்றே நோவார் ! 23

மாட்டரசின் கொடுமைகளை மனவறையில்
அடைத்து வைத்து வருந்திப் பாடுங்
காட்டகத்துப் பறவையிடம் முறையிட்டார்
முகிலிட்மும் கரைந்தார் நொந்தே ! 24

— பகலவனுக்கே வாக்களிக்கக் கருதுதல் —

பாட்டிசைக்கப் பகலவனும் எழவே வாடிப்
படுத்திருந்த செடிகொடிகள் எழக்கண் டன்னோர்
போட்டியிடு முறுப்பினரிற் பகலோன் சின்னம்
பொருந்தியவர்க் களித்திடுவோம் வாக்கை யென்றார் 25

## அ. தோற்றம்

[அண்ணாவின் தோற்றத்தால் [வரலாற்றால்]

அவன்றன் தொண்டையுணர்ந்தனர். அண்ணாவால் உயர்ந்த கலையும், தமிழும் அவர்தம் கண்முன் தோன்றின. குமு காயச் சீர்தருத்தம் மக்கள்தம் நெஞ்சைக் கொள்ளை கொண்டது. அவன் அணி தேர்தலிற் போட்டியிடப் போவதை யறிந்து புன்முறுவல் பூத்தனர்.

மாண்டுவிடத் தமிழ்ப் பகையும் மகிழ்வடையத்
தமிழ்க்குடியும் மதியோ டண்ணா
ஈண்டெழுந்தான் தமிழரசன் எழில்வழியில்
அவன்நடந்தான் இயம்பக் கேண்மின்! 1

வள்ளுவரின் வழியரசு வகையோடு
நடைபெறவே வழிவ குக்கக்
கள்ளமிலா நமதண்ணா கவினாகப்
பிறந்திருந்த கதையைக் கேண்மின்! 2

பொருளியலின் கார்ல் மார்க்கசாய்ப் பொறுமையிலே
காந்தியாராய்ப் புவியிற் றோன்றி
யருளியலில் லிங்கனென்றும் எழுத்துலகின்
பெர்ஞட்சா அவத ரித்தான். 3

*—கலைஞர்களைத் தந்த காஞ்சி, தலைவனையும், தந்தது—*

கலைஞரையுங் கவிஞரையுங் களித்தளித்த
காஞ்சிநகர் கலையில் வல்ல
தலைவரையுந் தந்துலகில் தகை சான்ற
புகழ்பெற்ற தன்மை பார்மின்! 4

— அன்னையுந் தந்தையும் —

பங்காரு எனுந்தாய்க்கும் பண்பாளர்
நடேசனார்க்கும் மகனாய் அண்ணா
சிங்காரக் காஞ்சியிலே பிறந்துலகைச்
சிறப்புவித்த சிறப்பைக் காண்மின் ! 5

— பற்றுள்ள சிற்றன்னை —

சிற்றன்னை இராசாமணி எழிலண்ணா
பிறந்தவுடன் சிறிதும் நீங்காப்
பற்றோடு வளர்த்துவந்தார் பலர்புகழ
ஒழுக்கத்தைப் பயில வைத்தார். 6

— புதையல் —

வெட்டுகின்ற மண்ணுக்குட் புதையலதைக்
கண்டவர்போல் விரைந்து வந்தது
கட்டுடலைக் கடந்தபடி கரைந்துதித்த
அண்ணாவைக் கண்டார் கேண்மின் ! 7

— பகலவன் மகிழ்தல் —

அறிஞரண்ணா பிறந்தவுடன் அகம் மகிழ்ந்தான்
பகலவனும் அண்ணா செல்லும்
நெறியுரைக்குஞ் சின்னமாக நிலைபெறலாம்
என வெண்ணு நினைவைப் பார்மின் ! 8

—பயின்று வருதல்—

பச்சையப்பன் பள்ளியிலே கற்றுவந்த அண்ணா
பாங்கினையும் பண்பினையுங் கற்றுவந்தா னாங்கே!
பச்சையப்பன் கல்லூரி தன்னிலவன் பட்டம்
பாங்குடனே பெற்றுலகைச் சீர்திருத்த வந்தான்.

—பூமுடித்துச் சீராட்டல்—

பெண்ணையன்னை பேணுதல்போல் அண்ணனையும் பேணிப்
பேசிவந்தார் வாமாவென வாய்குளிர ஆங்கே!
கண்ணையவர் ஈர்ப்பதற்குக் கார்குழலில் நீண்ட
கட்டுப்பின்ன லிட்டவரைக் காத்து வந்தார் கேண்மின்! 10

—நீண்ட சடையை வேண்டா வென்றனன்—

தொத்தா! தொத்தா நீண்டசடை யேனெனக்கு வேண்டா
தொல்லையாக உள்ளதெனச் சொன்னவுட னண்ணா
கொத்துமலர்த் தேன்வடிக்குஞ் சொல்லையன்னை ஆய்ந்து
கூறிநின்றாள் நாளையதை வெட்டிடுவோ மென்றே! 11

—கேட்குந் தன்மை—

தூங்குபவன் போலிருந்து சொல்லுவதைக் கேட்டுச்
சொல்லுகின்ற வன்மைபெற்ற தூயவனா யண்ணா
பாங்குடனே யுள்ளதனை யாசிரியர் கண்டு
பன்னிவந்தார் வாழ்த்தையவன் நாளுமங்கே பெற்றான்! 12

— கற்க்குந் தன்கை —

கற்றதனை நெஞ்சை விட்டுச் செல்லவிட் மாட்டான்
கற்பதற்குச் செல்ல அன்னை வாயுரையைக்
கேளான்
கற்றபின்னே கற்றவனாய்த் தற்பெருமை கொள்ளான்
காஞ்சிதந்த பேரறிஞன் செல்வனண்ணா
ஆமாம் ! 13

— பழக்கம் —

மூக்கினிலே பொடியிடுவான்
முதிர்ந்த- தமிழ்க் குடிப்பண்பை
நாக்கினிலே படிய வைக்க
நாளும்வெற் றிலையிடுவான். 14

அண்ணா வருந்துதல்-

விடுமுறையில் வரும்பொழுது வெறுங்கழுத்தாய்
நகையிழந்த விளத்தங் கண்டு
கொடுந்துயரந் தனையடைந்தே யன்னையிடங்
கற்பதற்குச் செல்லே னென்றான். 15

— பயில இசைதல் —

இன்றிழந்த அணியோநீ யெழிலாகப்
பயின்றுவிட்டால் என்க முத்திற்
கென்றும்வரும் எனவுரைக்க இனிய அன்னை
பயில அண்ணா இசைந்தான் பின்பே ! 16

— பயிலத் துன்பம் —

குடியிருந்த திருவீட்டின் குரலடங்க
இரவுமணி பன்னிரண்டாம்
துடிதுடித்த நமதண்ணா பயில்வதவர்
உறங்கியபின் துன்பம் பார்மின் ! 17

— ஆசான் சிறப்புவித்தல் —

கட்டுரைகள் எழுதுகையிற் பிறர்கருத்தைத்
திருடியவன் களிக்கா மற்றன்
திட்டமதைக் கூறுவதைத் தெரிந்த ஆசான்
சிறப்புவிக்கத் திகழ்ந்தான் அண்ணா ! 18

— பணமற்ற நிலையைப் பகர்தல் —

சின்னத்தம்பி பிள்ளையெனு முதல்வர்க்குத்
தெரிவித்தான் சிறந்த அண்ணா
என்னிடத்திற் பொருளில்லை யதனால் நான்
பயிலவில்லை யெனத்தன் வாயால் ! 19

— சின்னத்தம்பி பிள்ளை புத்தகத்தின் பொறுப்பேற்றல் —

புத்தகத்தின் பொறுப்பேற்றாற் பயில்வாயா
யெனக் கேட்கப் ; புதின ஆசான்
எத்துணையோ நன்றி சொல்லும் குறியோடு
தலையசைத்தே இனிதாய்க் கற்றான் ! 20

இன்றோ ! தாலியையும் இளைஞர் வழங்குவர்

இன்றுமட்டு மறிஞரண்ணா பொருளில்லை
யெனச் சொன்னால் இளைஞரெல்லாந்
தன்வாழ்வுத் தாலியையும் வழங்கிடுவர்
மகிழ்வுடனே பொய்யோ? மெய்யே! 21

—மண முடித்தல்—

கல்லூரி தனிலண்ணா கவினாகப்
பயிலுகையிற் கன்னி ராணி
நல்லாளை மணமுடித்தார் மனமகிழ்ந்தார்
பெற்றோரோ பின்பும் கற்றார். 22

—இதுவும் அது—

சீர்திருத்த இயக்கத்தின் சிற்பியவன்
திருமணத்திற் சீர்திருத்தம்
நேர்வந்து நிற்பதற்கு வழியில்லை
பின்பதனை நிலைக்கச் செய்தான். 23

—பட்டறிவோடு பட்டம் பெறுதல்—

பொருளியலில் அரசியலில் வரலாற்றிற்
பொறுப்புடனே புகுந்து அண்ணா
பெருமையுடன் முதுகலைஞன் பட்டமதை
பெற்றுவிட்டான் பிறர்க்கே வாழ! 24

— இதுவும் அது —

பட்டறிவு வழங்குகின்ற பகுத்தறிவை
யடைந்திருந்த பகலோன் அண்ணா
பட்டமது வழங்குகின்ற எழிலறிவு
மிணைந்திடவே பாரை வென்றான். 25

— எழுத்தராக இசைவற்றுப் பணிபுரிதல் —

கற்றதும் காஞ்சி மன்றிற்
கவின்மிகு எழுத்தர் வேலை
பெற்றுநம் அண்ணா செய்தான்
பெருமையாய் எண்ண வில்லை 26

— ஆசானாக அகம் மகிழ்ந்தமர்தல் —

பள்ளியிற் கற்பிக் கின்ற
பணியினைக் காஞ்சி யிய
உள்ளமும் விரும்பி அண்ணா
உயர்பணி புரியும் போதே! 27

— இதுவும் அது —

சென்னையை யடைந்தான் ஆங்குஞ்
சிறந்தநற் பணியைச் செய்ய
தன்னையா சிரிய னாகத்
தானவன் மாற்றிக் கொண்டான். 28

*— அரசியலிற் புகுதல்—*

கட்சியிற் சேர்ந்த அண்ணா
கவிநடைப் பேச்சால் மக்கள்
நட்பினைப் பெற்றான் ''குண்டூர்''
நல்லவை முதல வையாம். 29

*—செய்தித்தாள் ஆசிரியனாதல்—*

நவயுவன் என்ற ஏட்டின்
நல்லரும் ஆசா னாகத்
தவமகன் அண்ணா வந்தான்
தழைத்தன தொழிற்சங் கங்கள் 30

*—பெரியார் மயங்கப் பேருரையாற்றல்—*

கோவையின் காங்க யத்திற்
கூறிய அடுக்குச் சொல்லால்
நாவையே பார்த்தி ருந்து
மயங்கினார் பெரியார் பின்பு! 31

*—திருப்பூர் மண்ணிற் சேர்ந்தனர் இருவர்—*

குமரனைத் தந்த வூரிற்
குள்ளனைப் பெரியார் பெற்றுத்
தமதுயி ராக்கிக் கொள்ளத்
தவித்தவர் முடித்துக் கொண்டார் 32

— நகர்மன்றத் தேர்தலிற் போட்டியிடுதல் —

போட்டியிட் டண்ணா தோற்றார்
　　புகழ்மிகு சென்னை மன்றில்
ஈட்டினார் திரு வி. க. வின்
　　எழில்மிகு புகழ்ப்பாட் டொன்றை ! 　33

— இதுவும் அது —

அறிந்ததைச் சொல்ல வேண்டும்
　　அவர்மனம் விரும்புவோரைத்
தெரிந்தவர் எடுத்த பின்னால்
　　தீர்ப்பென யேற்க வேண்டும். 　34

— இதுவும் அது —

என்றுநம் அண்ணா சொன்னான்
　　இனிமையாய் அவனுக்காக
அன்றுநற் பணிகள் செய்தோர்
　　அறிந்ததை வியப்புற் றாரே ! 　35

—செல்வர் உடையிற் செல்ல சின்னாவைப்பார்க்க ஒப்புதல்—

பொப்பிலி யரச னோடு
　　போயவன் பார்க்க மட்டு
மொப்பினான் உயர்ந்த ஆடை
　　உடுத்திட யேழைத் தொண்டன் 　36

## இதுவும் அது

மற்றைய யிடங்க ளெல்லாம்
மகிழ்வுடன் எளிமை மீதே
பற்றினை வைத்துக் கொண்டான்
பாவலன் நமது அண்ணா. 37

## திருச்சி விசுவநாதம் இந்தியை எதிர்த்தல்

இந்தியை யெதிர்க்க யெண்ணி
இனியவர் விசுவ நாதஞ்
சிந்திய கண்ணீ ரன்றோ
திகழ்ந்தது கடலில் நீராய்! 38

## —இதுவும் அது—

அவரமைத் திருந்த மன்றில்
ஆங்கில வுரையை நல்ல
தவமொழித் தமிழிற் சொன்ன
தலைவனே தயங்கா அண்ணா. 39

## விடுதலைச் செய்தித்தாளின் ஆசிரியனாதல்

படுகொலை மதத்தாற் செய்த
பகைவரை யொழிப்ப தற்கே
விடுதலைச் செய்தித் தாளில்
விளங்கினான் ஆசா னாக! 40

## கட்டுரை வன்மையும் பெரியார் வாழ்த்தும்

மாடிக்கே பெரியார் வந்து
வாழ்த்தினை வழங்கச் செய்த
ஈடிலாக் கட்டு ரைகள்
எத்துணை கோடி தந்தான் 41

—நாவலரும், பேராசிரியரும் இணைதல்—

ஆற்றி னோரமெனும் அண்ணன் சொற்பொழிவை
ஆய்ந்த அன்பழக னோடுதான்
ஏற்ற மிக்கநெடுஞ் செழியன் வந்திணைந்தான்
என்னை யண்ணனண்ணா ஆற்றலோ? 42

—நாயுடு அழைத்தலும் நம் அண்ணா மறுத்தலும்—

கைவல்யம் சுவாமியென்பார், கனித்தமிழ்நாட்
டறிவியலான் அண்ணா வுக்குக்
கைநிறையப் பொருள் தருவார் அவரிடத்தில்
வருகவெனக் கழறக் கேட்டு! 43

—இதுவும் அது—

பொருளுக்குப் பணிபுரிய விலையிங்கே
புவியுயரப் புரியுந் தொண்டைப்
பொருளளித்துத் திருப்பிடினும் வரமாட்டேன்
எனவுரைத்தான் புதுமைத் தொண்டன். 44

— *அண்ணாவின் ஆயுந்திறம்* —

எர்சுகினை யாளுநரா யமர்த்த வென்றால்
இலையவற்குத் திறமை யென்றே
எர்சுகினை யமர்த்துமுன்னே யியம்பிவிட்டார்
நமதண்ணா எதிர்த்தோர் தோற்றார். 45

— *நல்லது செய்யின் நற்றுணை புரிவான்* —

வெள்ளையரின் தீச்செயலைப் போக்கிடவே யாட்சி
வேலையினை விட்டு வந்தார் மாட்டணியார் பின்போ
உள்ளமிலா நீதியணி யாளவரக் கண்டே
ஒப்பிடாமல் தீயதெனக் கூறியவன் அண்ணா ! 46

— *நாவலர்க்குப் பதிலுரைத்தல்* —

கோவிலுக்குட் கீழ்க்குலத்தோர் செல்லவழி செய்ய
கூறிடவே தந்தையவர் நாவலருந் தோன்றி
கோவிலையே தாக்கும் நமக் கென்னபயன என்று
கூறிடவே உள்ளதென ஒப்பவைத்தோன் அண்ணா. 47

— *சிறையிற் கரைதல்* —

அண்ணனண்ணா இந்திதனை யன்றெதிர்த்த தாலே
ஆளுநரால் வெஞ்சிறையில் துன்பமுறக் கண்ட
அண்ணனின் நற் றாயழுக அன்றழுதா னண்ணா
அன்றுமுதல் விட்டுவிட்டான் தானழுகும் பண்பை 48

—ஆங்கில அரசின் கொடுமை—

ஆங்கில அரசைப் போற்ற
வன்றைய நீதிக் கட்சி
தீங்குள போரைச் செய்யச்
செப்பினார் ஆங்கி லேயர்! 49

—போரின் வேர றுத்தல்—

போரினை வளர்ப்ப தற்கு
புவியினில் உழைக்க மாட்டேன்
போரின்வே ரறுப்பேன் போரை
போக்கவே வருவே னென்றான். 50

—(சுமத்திய பழி) இதுவும் அது—

மாட்டணி யந்த நாளில்
மறுக்கவே போரைச் செய்ய
மாட்டணி மீது பற்றை
வைத்துளான் அண்ணா என்றார்- 51

—(சொல்லிய விடை) இதுவும் அது—

நல்லதை மாட்டுக் கட்சி
நயமுடன் செய்யு மென்றால்
நல்லதை யெதிர்ப்ப தற்கு
நான்மன மொப்பே னென்றான். 25

— தந்தையோடு வடக்கே செல்லல் —

வடக்கிலே பெரியா ரோடு
மகிழ்வுடன் சென்று பேசுந்
துடுக்கினை யறிந்தோர் அண்ணன்
தூய்மொழி கேட்க யெண்ணி ! 53

— தந்தையை மதிக்கும் தனிப்பண்பாளன் —

அண்ணனை அழைத்த போது
அவன்மறுத் துரைத்தான் தந்தை
தன்னை நான் பிரிந்து பேசுந்
தன்மையை விரும்பே னென்று ! 54

— கங்கையின் கரையில் அண்ணா
தந்தையோடு செல்லல் —

கங்கையின் கரையில் அண்ணா
கவின்மிகு தந்தை யோடு
பொங்கிடும் அருளாற் செல்ல
புதுமையென் றவரைச் சூழ்ந்தார் 55

— வடவர் வணங்கல் —

சாமியார் பெரியா ரென்றுஞ்
சாமியின் அடுத்த சாமி
நாமின்று வணங்கு கின்ற
நல்லநம் அண்ணா வென்றும். 59

—இதுவும் அது—

வந்திவர் காலைத் தொட்டு
வணங்கினர் வடக்கு மக்கள்
சிந்தனை சிறிது மின்றிச்
செய்ததைப் பெரியார் கண்டு 57

தந்தை தலையிலே யடித்தல்; தனயன் மகிழ்ச்சியால் களித்தல்

தலையிலே யடித்துக் கொண்டார்
தனயனைப் பார்த்த வாறே
கலைஞனாய் இருந்த அண்ணா
கவின்மிகு காட்சி யென்றான் 58

—சேலத்தில் மாநாடு கூட்டுதல்—

நீதிக் கட்சி மாநாட்டை
நினைத்தார் நடாத்தச் சேலத்தில்
தீதில் லாத நமதண்ணா
செய்தான் சிறந்த பணியாங்கே! 59

—ஆங்கிலேயர் அளித்த பட்டத்தை யகற்றல்—

திராவிடர் கழக மென்னுந்
திருப்பெயர் தன்னை யிட்டான்
திராவிடர்க் காங்கி லேயர்
தீப்பட்டம் எதற்கென் றானே! 60

—ஆங்கிலேயருக்கு அடிமையென்ற களங்கத்தை நீக்கல்—

வெள்ளையர் போரைச் செய்ய
விரும்பவே மறுத்த அண்ணா
வெள்ளையர்க் கடிமை யென்ற
வீண்பழி யொழிய வைத்தான். 61

—ஆசிரியர் பொறுப்பைக் கைவிடுதல்—

"விடுதலை" யாங்கி லேயர்
தீக்கரஞ் சேர்ந்த தாலே
நடுநிலை பேணு மண்ணா
நீங்கினான் அதனை விட்டே! 62

—ஆங்கிலேயர் கலங்குதல்—

நெறிமுறை தவறா அண்ணா
நீங்கவே அதனை விட்டு
நெறியினை யிழந்த மூடர்
நினைவையு மிழந்தா ராங்கே! 63

—நயமுடன் நடித்தல்—

நாடகம் எழுதித் தானே
நயமுடன் நடித்து வந்தான்
கேடெலாம் அகல எண்ணிச்
சீர்த்தியை யமைத்துத் தந்தான் 64

—கூத்தைப் பார்த்த பெரியார் புகழுதல்—

பேசிடும் நூறு கூட்டம்
　　பெற்றிடும் பயனை அண்ணன்
மாசிலா கூத்தொன் றன்றோ
　　பெற்றதாய்த் தந்தை சொன்னார்　　65

— தந்தையின் முடிவைத் தொண்டர்கள் ஏற்றனர் —

அனைவருங் கருப்புச் சட்டை
　　யணிந்திட வேண்டு மென்ற
நினைவினைப் பெரியார் சொல்ல
　　நெறியெனத் தொண்டர் கொண்டார்.　66

— அண்ணா மறுத்தல்—

போரினைப் புரிய மட்டும்
　　போட்டிட லாமென் றண்ணன்
கூறிடத் தந்தை ; யில்லை
　　கூறிய துறுதி யென்றார்.　　67

— அரசு ஆணை பிறப்பித்தல் —

அத்தகு நேரந் தன்னில்
　　அரசுமே கருப்புச் சட்டை
பொத்திடும் மனிதர் தம்மைப்
　　பொசுக்கிடு மென்று சொல்ல !　　68

—ஆணையை எதிர்க்க அண்ணா முனைதல்—

நாவலர் ஆடை தன்னை
நம்மருந் தலைவன் போட்டு
கேவலம் அகலச் செய்த
சீர்த்தியே சீர்த்தி யன்றோ! 69

—தந்தை மகிழ்ச்சியடைதல்—

தந்தையோ இதனைக் கண்டு
தாங்கிடா மகிழ்ச்சி பொங்க
விந்தையாய் அண்ணன் மெய்யை
விரும்பியே ஆங்கு கண்டார். 70

—அண்ணா போல் தலைவன் கிட்டுதலரிது—

கடமையைச் செய்வ தற்குக்
கரியநம் அண்ணா போன்றோன்
கிடைத்திட மாட்டா னென்றும்
சீர்த்தியும் பெறவே மாட்டான். 71

— இதுவும் அது —

சோதனை கட்சிக் கென்றால்
சோர்வுடன் இருப்பா னண்ணா
ஆதவன் ஒளியை நல்கும்
அவன்முகம் மாறிப் போகும். 72

—அணியினர் அருங்குணம்—

அவன்முகம் மாறக் கண்டால்
அணியினர் வாடிப் போவர்
எவனடா இவனைப் போல
இனியநற் றலைவ னென்பர்! 73

பெரியார் விடுதலை நாளைத் துக்கநாளெனச் சொல்லுதல்—

விடுதலை நாளைத் தந்தை
வெறுத்ததால் துக்க நாளாய்ப்
படுமென உரைக்க அண்ணா
பதறினார் துடிது டித்தார். 74

—அறிஞர் அண்ணா மறுப்புரைத்தல்—

சிதம்பரங் கப்ப லோட்டிச்
சிவாவுடன் செய்த போரின்
பதங்குலைத் திடுதல் நன்றா?
பாவமே யென்றா னண்ணா! 75

—இதுவும் அது—

பாரதி விடுத லைக்குப்
பாடிய பாட்டும் வீணா
பாரதம் விடுபெற் றுள்ள
பாங்கினைக் குறைத்தல் நன்றா? 76

— இதுவும் அது —

என்று நம் அண்ணா ஆய்ந்தான்
எதுவுமே விளங்க வில்லை
நன்றிலை விடுத லைநாள்
நந்திரு நாளென் றானே ! 77

— தந்தை பெரியார் சினங் கொள்ளுதல் —

இவ்வுரை கேட்ட தந்தை
ஈடிலாச் சினத் - தினாலே
கவ்விய இரையை விட்ட
கடும்பருந் தானார் பின்பு. 78

— அண்ணாவைப் பிரிந்து வருந்துதல் —

அண்ணனைப் பிரிந்து தந்தை
அடைந்துள துன்பஞ் சொன்னாற்
கண்களைத் துடைப்பதற்குக்
கார்முகில் துணியாய் வேண்டும். 79

— தந்தையைப் பிரிந்த அண்ணா வருந்துதல்—

தந்தையைப் பிரிந்தே அண்ணா
தாங்கிடாத் துயர முற்றுச்
சிந்திய கண்ணீ ரன்றோ
தென்றிசைக் கடல்நீ ராகும். 80

### கழகத் தொண்டர் நிலை

இத்தகு துயர முற்ற
இருவரின் நிலையைக் கண்டு
கத்தினர் கண்ணீர் விட்டுக்
கழகத்தின் தொண்டரெல்லாம்! 81

### — தந்தை பெரியார் அறிக்கை —

திராவிடர் மா நா (டு) ஒன்று
சிறப்புடன் நடக்கு மண்ணா
திராவிடர் மாநாட் டுக்குத்
திகழுவான் தலைவ னாக! 82

### —இதுவும் அது—

என்றுநந் தந்தை விட்ட
எழின்மிகு அறிக்கை கண்டோர்
இன்முகங் கொண்டு கூடி
என்னென்ன பேசி விட்டார் 83

### —மாநாட்டிற் கண்ட காட்சி—

தனயனோ வண்டி மீது
தந்தையோ நடந்து வந்தார்
கனவென வெண்ணி மக்கள்
கருதியே பூத்துப் போனார் 84

— தொண்டர் சூளுரை —

தந்தையைத் தனயன் சேர்ந்த
தகைமிகு காட்சி கண்டோர்
விந்தையில் மூழ்கித் தீய
வேரினை யறுப்போ மென்றார். 85

— தந்தை தனயனுக்குத் திறவுகோல் தருதல் —

அண்ணனின் கரத்திற் றந்தை
யளித்திடச் சாவி தன்னைக்
கண்களைக் கசக்கிக் கொண்டு
களிப்புடன் விழித்தார் தொண்டர். 86

— தொண்டர் துன்புறுதல்—

அளவிலா யின்பங் கண்டோர்
அடுத்தொரு துன்பங் காணும்
நிலையினை யடைவதைப்போல்
தந்தையின் ''மணத்தால்'' நொந்தார் 87

— மதியழகன் ஏட்டில் மலர்ந்தது கழகம் —

தந்தையினைப் பிரிந்து வந்து தலைவனின்றிக்
கழகமொன்றைத் தழைக்கச் செய்தான்
நந்தலைவன் மதியழகன் திருவேட்டில்
விதிமுறையை வரைந்தவாறு 88

—தி மு க வின் முதற் கூட்டம்

பூங்காக்கள் கோடியுண்டு ராபின்சன்
பூங்காவே புவியில் மேன்மை
தாங்கியுள்ள எழிற்பூங்கா ஏனென்றாற்
கழகமது எழுந்த தாங்கே! 89

—முதற் கூட்டத்தில் அண்ணாவின் உரை—

உலகழிந்த போதும்நம துயிர்த்தலைவன்
பெரியாரே உணர்வீர் வையம்
பலவழியில் உயர்வடையப் பணிபுரியுங்
குலத்தோரே பார்மின் என்றான். 90

— அண்ணாவின் பண்பை அறிவோம் —

பிறரையண்ணா தாக்கிவளர்ந் திருந்ததி
தாக்குவதைத் தாங்கித் தானே
அறவழியிற் கழகமமைத் தரும் பணிகள்
புரிந்து வந்தான் அறிவோ மேநாம். 91

— முதற்கூட்டத்தின் எழிலுரையில் அண்ணா கூறியது —

இருகுழலா லமைந்தவொரு துப்பாக்கி
இருப்பதைப் போல் இருக்கு மிந்த
இருகழகம் எனவுரைத்த எழிலுரையால்
மகிழ்வடைந்தே எழுந்தா ராங்கே! 92

— இதுவும் அது —

பெரியாரின் தலைமையிலே பணிபுரிந்த
பெருமையினைப் பெற்ற நானா
பிறிதொருவர் தலைமையிலே பணிபுரிவேன்
எனச் சொல்லி வடித்தான் கண்ணீர்! 93

— இதுவும் அது —

—தேர்தலில் நிற்கத் தேர்தல் பாரீர்—

போட்டியிடப் பொதுமக்கள் தமைக்கூட்டி
மாநாட்டில் தேர்தல் வைத்தான்
போட்டியிடப் பெருவாக்கைப் பொதுமக்கள்
அளித்திடவே புகுந்தான் தேர்வில்! 94

— இதுவும் அது —

கட்சியினை யிவன்போல நடத்துபவர்
தேர்தலிலே கலப்பதற்கும்
நட்புவழித் தேர்தல் வைத்த பெருந்தலைவன்
இவனன்றி நாட்டி லுண்டோ? 95

—வெற்றி பெற அண்ணா கண்ட வழி—

வீரர்களைக் கணக்கிட்டுப் போராட
நினைத்தவர்கள் வெற்றி காணார்
வீரமற்ற கோழைகளைக் கணக்கிட்டுப்
போராடின் வெற்றி யென்பான்! 96

— இதுவும் அது —

கோழைகளை மதித்தெழுப்பும் குரிசிலண்ணா
கூறியதைக் கூர்ந்து காண்பீர்
கோழையவன் யாரென்றாற் கழகத்திற்
றானென்றுங் கூறுவானே ! 97

— அண்ணாவின் அணிபுரிந்த அறப்போர்கள் —

மும்முனைப்போ ராட்டமுடன் எழுத்துரிமைப்
போராட்டம் முதலில் இந்தி
வம்புசெய்ய வந்ததனை யெதிர்த்தண்ணா
புரிந்தபோருஞ் சிறந்த போரே ! 98

— நிதியளிக்கும் மதி படைத்தோன் —

அழகிரி சாமி யென்பார்க்
கண்ணனே நிதியைச் சேர்த்துப்
பழகிய நட்பைக் காத்த
பாங்கினை யென்னை யென்பேன். 99

— இதுவும் அது —

அழகிரி சாமி யென்பார்
அண்ணனைத் திட்டக் கேட்டும்
அழகிரி சாமிக் காக
அவன் துணை புரிந்தான் பார்மின் 100

— பசுமலை பாரதியோடு அண்ணா —

சோமசுந்தர பாரதியோ டறிஞரண்ணா
இராமாயணம் பற்றிப்பேச
நாமமதைப் பகர்ந்திடும்போ திருபேரா
சிரியருளர் எனவு ரைக்க 101

— அண்ணாவின் அடக்கம் —

ஆசிரியர் ஒருவருடன் மாணாக்கன்
ஒருவனெ அறைந்தே அண்ணா
மாசின்றிப் பேசியதைக் கேட்டவுடன்
நாவலரும் மகிழ்ந்தார் ஆங்கே ! 102

—இதுவும் அது—

நாவலர்போல் அறிவினிலே அகவையிலே
எழில்வாழ்வால் நடத்தை தன்னால்
கேவலம்நான் உயரவில்லை யெனவுரைக்க
அமர்ந்திருந்தோர் கண்ணீர் விட்டார். 103

—இதுவும் அது—

அட்க்கத்தால் உயர்ந்தவனை யாரேனும்
பார்க்கயெண்ணின் அவனிதன்னில்
அடக்கத்தா லுயர்ந்த அண்ணன் திருப்படத்தை
அவனுக்குநாம் அளிப்போம் நன்றாய் ! 104

—கலைஞர் கருணாநிதியின் தேர்தற் கணிப்பு—

தேர்தலின் பணியைப் பற்றித்
தேர்வினை வைத்தால் வெல்லப்
பார்புகழ் வழியைக் கற்றோன்
பைந்தமிழ்க் கலைஞன் அன்றோ! 105

—இதுவும் அது—

சென்னையின் நகர மன்றத்
தேர்தலின் முடிவைப் பற்றி
அண்ணனின் கணிப்பைக் கூட
அவனன்றோ அன்று வென்றான். 106

—இதுவும் அது—

மோதிரம் தருவே னென்றான்
உன்னுரை முடிந்து விட்டால்
தீதிலா துரைத்த அண்ணன்
செப்பிய வாறு செய்தான் 107

—அண்ணா சொன்ன சொற்காத்தல்—

தம்மரும் இல்லா ளுக்குத்
தந்திலன் அணிக ளானால்
தம்மருந் தம்பிக் கன்றோ
தந்தனன் சென்ன வாறு! 108

— அண்ணா அணிசென்னை நகராட்சிப் பொறுப்பேற்றல் —

ஆட்சியைப் பெற்றான் அண்ணா
அரசியல் அறத்தி னோடே
ஆட்சியில் அமர்ந்தி ருந்த
அவனணித் தொண்டர் வந்தே ! 109

— கழகத் தொண்டர் வேண்டுகோள் —

எங்களின் றலைவ நாட்டை
எழில்பெற வைக்க வைந்தோய்
உங்களால் உயர்ந்த நாட்டில்
உம்சிலை வேண்டு மன்றோ ! 110

— இதுவும் அது

என்றவர் பகர்ந்த பின்னால்
இயம்பினான் அண்ணா ஆங்கே
என்சிலை எதற்கு மண்ணில்
இஃதெலாம் வேண்டா என்றே ! 111

— பிறரைப் போற்றிய பெருந்தனிப் பண்பு —

சத்திய மூர்த்தி யோடு
தமிழ்மகன் காம ராசின்
புத்தரும் தொண்டை யெண்ணிப்
பொறுப்புடன் சிலையை வைக்க. 112

— இதுவும் அது —

— தொண்டர் தலைவனின் தூய உள்ளத்தையறிதல் —

அண்ணன்வாய் கூறக் கேட்டோர்
அண்ணனின் வெள்ளையுள்ளந்
தன்னைத் தான் புரிந்து கொண்டார்
தலைவனின் உரையைக் காத்தார். 113

— தொண்டர் முழக்கம் —

இத்தகு தலைவன் உண்டா
இப்பெரு முலகி லெங்கும்
இத்தகு சிறப்பைப் பெற்ற
எம் ஒரே தலைவன் அண்ணா 114

— இதுவும் அது —

என்றவன் அணியைச் சார்ந்தோர்
இயம்பியே ஆடி வந்தால்
நன்றிலை யென்றி யாரும்
நவின்றிட வியலுமாமோ ! 115

— சம்பத் மாநாடு கூட்டுதலும், அண்ணா உரை நிகழ்த்துதலும்

இந்தியை யெதிர்ப்ப தற்கே
எடுத்தனன் சம்பத் மாநா(டு)
இந்தியை யெதிர்ப்ப தேனென்(று)
இயம்பினன் அண்ணா ஆங்கே ! 116

[சொல்லின் செல்வர் சம்பத் முடிவுரை மொழிதல்]

அண்ணனின் உரையே யிந்த
அவையுரை என்றான் சம்பத்
அண்ணனைப் பிரிவோ மென்றா
அன்றவன் நினைத்திருப்பான். 117

சம்பத் கண்ணதாசன் பிரிய அண்ணா வருந்துதல்

சம்பத் கண்ணதாசனுடன்
தன்னைப் பிரிந்த நிலைகண்டு
தெம்பையிழந்தே மனநொந்து
தேம்பி யழுதான் நமதண்ணா 118

—இதுவும் அது—

அண்ணனைப் பற்றி அன்னோர்
ஆய்ந்து தான் பிரிந்தா ரென்று
மண்ணிலே யாருஞ் சொல்லார்
மாண்புள தலைவன் அண்ணா 119

அண்ணா அரசுக் கட்டிலில் அமர்தல்

இங்கனம் வளர்ந்த அண்ணா
ஏறினான் அரசுக் கட்டில்
பொங்கிடும் அன்பால் நாட்டைப்
பொறுப்புடன் ஆண்டா னன்றோ! 120

—[அண்ணாவின் பெற்றோர்க்கும் காஞ்சிக்கும் வாழ்த்து]—

அண்ணா தன்னைப் பெற்றுத் தந்த
அவர்தம் பெற்றோர் வாழ்கவே!
அண்ணா தன்னைப் பெற்றுத் தந்த
அழகுக் காஞ்சி வாழ்கவே! 121

— அவருக்குந் தொண்டர்க்கும் வாழ்த்து —

அண்ணா வாழ்க! பண்பு வாழ்க!
அவர்தம் தொண்டு வாழ்கவே!
அண்ணாவோடு சேர்ந்திருந்த
அருமைத் தொண்டர் வாழ்கவே! 122

## 9. மக்களுக்குள் மக்கள் கூறியது

[மேடைகளில் அண்ணாவின் அணியைச் சார்ந்தவர்களின் வீர உரைகளால் மக்கள் பலவாறாகத் தங்களுக்குள் கூறிக் கொண்டார்கள். நான்கு வகைப்படையிருந்த தமிழகத்தில் இசைப்படையும், இயற்ப்படையும் கூத்துப் படையுமாகிய முப்படைகளைக் கண்ட தமிழர்; என்னே! அண்ணனின் படையெனப் பன்னினர்.]

அறுபத் தேழுப் பொதுத் தேர்தல்
அமைப்பை யறையப் புகுவதெனில்
ஒருபத் தாண்டும் போதாதே
உலகு மிதுபோற் காணாதே ! 1

குழந்தை முழுதுங் கூறாமல்
கூறும் மொழியைச் செவியுற்றே
இழந்த பொருளை யறிதல் போல்
இயம்பும் பரணி கேண்மினோ ! 2

— காஞ்சிதான் அண்ணாவைத் தந்தது —

பட்டுச் சேலையைப் பாங்கொடு நெய்திடும்
பண்பு கொண்டவர் வாழ்ந்திடுங் காஞ்சிதான்
கட்டிக் காத்திடத் தாய் மொழி தன்னை நம்
கண்ணா மண்ணனுந் தோன்றிடச் செய்ததே ! 3

குலோத்துங்கனை விட அண்ணா மாமல்லனாவான்

குலோத்துங் கன்புவி யாண்டவன் ஆதலின்
கொண்டான் வெற்றியை அண்ணனோ
சாலையோர்
குலத்திற் றோன்றியே தேர்தலில் நின்றதால்
குலோத்துங் கன்தனை விஞ்சினன் அல்லனோ? 4

## —உள்ளமே பேரெழில் இல்—

அண்ணா வீட்டினைக் கண்டவர் செப்புவர்
அல்ல பொன்மனை இஃதென வாயினும்
அண்ணா உள்ளமே பேரெழில் இல்லென
அஞ்சார் செப்பவே நெஞ்சமுள் ளோரெனின்! 5

அன்பு நெஞ்சுடன் அச்சிறு வீட்டினில்
அண்ணா வாழ்ந்தனன் கற்றனன் மற்றவர்க்
கென்பு மீந்திடக் கற்றதால் மக்களின்
எண்ண வீட்டினில் வாழ்ந்தது போதுமே! 6

## மதிபோல் வாழ்ந்தான்

வானில் வெண்ணிலா வாழ்வதைப் போலவன்
வாழ்ந்தான் மக்களின் நெஞ்சினில் வாழ்ந்தவன்
தேனின் நற்சுவை தேக்கிய சொல்லினால்
செல்லான் மக்களின் நெஞ்சைவிட் டென்றுமே! 7

## கழகக் கொடியின் கீழ் அண்ணா

குண்டு முத்ததன் நல்லெழில் வண்ணமே
கொண்ட நல்லரும் நற்கொடி செந்தமிழ்
கொண்ட நல்லவை உன்னையேற் காதென
கூற இந்தியைக் கீழிருந் தான் துரை 8

— குந்தினான் அண்ணனோ !

என்பாற் கட்டிய கட்டடந் தன்னையோர்
இனிய தோலினால் மூடிய பின்னதில்
நன்றாய் உள்ளமாம் இல்லதை வைத்ததால்
நாட்டோர் இல்லெலாம் குந்தினான்
அண்ணனோ ! 9

— இராணியம்மையாரின் மாண்பு —

நாட்டின் நன்னலந் தன்னல மென்றவன்
நவில ராணியா மண்ணியார் உன்னிசைப்
பாட்டின் பொன்னலம் என்னலம் என்றுரைத்
தூட்ட நல்லுரம் தொண்டவன் செய்தனன். 10

— தம்பியர் கூற்று —

தம்பி மாருயிர் தம்முயிர் என்பவன்
தவித்த மக்களின் நன்னலம் பேணவே
தம்பிமார்களோ டாய்கையில் தம்பிமார்
தந்தார் வென்றிடலாமெனும் சொல்லினை ! 11

— தம்பிமார் மாண்பு —

அன்பினர் பண்பினர் நல்லவர்
ஆற்றிடும் தொண்டினிற் றூயவரே
தன்னுயிர் போயினும் அண்ணனின்
தண்மொழி காத்திடுந் தன்மையரே ! 12

—தமிழர் மாண்பு—

உயர்ந்த மனமும் உயர்ந்த
குணமும் உடையோர் தமிழர்களே
நயந்தே யுரைத்து நலமாய்
முடித்து நகைப்போர் தமிழர்களே! 13

—இதுவும் அது—

மாற்றா னெனினும் மனித
இனத்தை மதிப்போர் தமிழர்களே
போற்றா ரெனினும் புவியை
யுயர்த்தப் புலம்புந் தகைமையரே! 14

அன்னோர் நெஞ்சி லமர்ந்தனன் அண்ணா

இத்தகு செந்தமிழ் மக்களின்
நெஞ்சினில் ஏறிய நல்லவனே
புத்தகங் கற்றவன் பொன்னெறி
கொண்டிவன் பொன்னனண் ணாவவனே! 15

— அண்ணா மொழிந்தது —

தம்பி தமிழ்மொழி காத்திடத்
தக தமிழ்ப்பெயர் சூட்டிடத்
தாழ்ந்த தமிழ்க்குல மோங்கிடத்
தாய்நா டுயர்வுறச் செய்திட
தெம்பாய் உணர்ந்திட வேண்டுமே
செய்வீர் சுறுசுறுப் பாய்ப்பணி
தீய ரிடமிருந் தாட்சியை
சேர்ப்ப தினிதெனச் சொல்லவே ! 16

— தேர்ந்தெடுக்கத் திகைத்தனன் —

தேர்தற் பணியைச் சிறப்புடன்
செய்யத் தகுந்த தலைவனைத்
தேர்ந்தே யெடுக்க நினைத்தவன்
செய்த பணியாற் றிகைத்தனன்.
சேர்ந்த கழக வுறுப்பினர்
தேர்ந்த செயல ரனைவரும்
சீராய்ப் பணிகள் புரியவே
சேர்த்தான் கருணா நிதியையே ! 17

*—கருணாநிதி எழுந்தனன்—*

அறைந்தான் அண்ணனண்ணா அடைய ஆட்சியினை
அமைந்த நற்றலைவன் நிதியென
மறைந்தார் மாட்டியக்க மதியில் மூடரென
வழங்கி யங்கெழுந்தான் நிதியவன். 18

*—அண்ணா வெற்றியை உணர்தல்—*

பகர்ந்த வப்பொழுதே பகர்ந்த சூளுரையாற்
பயனுண் டென்றறிஞன் நினைத்தனன்
முகத்தின் நற்குறியால் முடிக்கும் நற்றிறனை
முழுதுங் கண்டுணர்ந்தான் அறிஞனே! 19

*அண்ணா ஆணையிடுதல்*

கருணா நன்நிதியே களிப்பாய்க் கட்டளையைக்
கவினாய்ச் செய்துவருங் கலைஞனே
அருளால் இவ்வுலகில் அரசு கொள்வதற்கிவ்
வரசைப் பற்றிவாவென் றுரைத்தனன். 20

*— கலைஞர் கருணாநிதி விடைபகர்தல் —*

இழிந்த இவ்வரசில் இருக்கு மூழலெலாம்
இனிதாய்ச் சொல்லிடுவேன் அதன்பிற
கொழிந்தா லிவ்வரசு மகிழ்வேன் இல்லையேனில்
ஒழிவேன் என்றுரைத்தான் கலைஞனே! 21



— கலைஞருக்கு அண்ணா உண்மையை உணர்த்துதல் —

இழிந்த.இவ்வரசில் இருக்கும் ஊழலெலாம்
இனிதாய்ச் சொன்னபின்னும் அதனையே
பழிக்கா திங்கிருப்போர் பயனுண் டென்றெடுத்தால்
மடிய வேண்டியவர் மக்களே ! 22

— இதுவும் அது —

அளித்தால் வாய்ப் பதனை யருமை யாயரசை
யமைத்து மக்களெலாம் மகிழவே
விழிப்பாய் ஆண்டிடலாம் விரும்பவில்லையென்றால்
விலகி வந்திடலா மென்றனன் ! 23

— கருணாநிதி எழுச்சியும், அண்ணாவின் மகிழ்ச்சியும் —

இருந்த போதுமண்ணா வெடுத்த நற்பணியில்
இருந்த தில்லையொரு தோல்வியென்(று)
இருந்த ஆண்மையுடன் இயம்பக் கேட்ட அண்ணா
எழுமின் ! வெற்றிநம தென்றனன் ! 24

— கருணாநிதி அண்ணாவின் தாள்பணிதல் —

அடைவேன் வெற்றியென் றறைந்தான் ஆண்மையில்
ஆசிமட்டுமே வேண்டினன்
தொடைகள் தேங்கிய சொல்லுடையோனவன்
துணிந்தோன்; தாள்பணிந் தெழுந்தனன். 25

— அண்ணா ஆசி வழங்குதல் —

அடைவாய் வெற்றியை அறிவேன் மெய்ம்மையை
அமைப்போ மாட்சியை யென்றனன்
தடைகள் வந்திடின் தகர்ப்பேன் என்றவன்
தலைநி மிர்ந்துரைத் தேகினான். 26

— நாவலர் நெடுஞ்செழியனார் மாண்பு —

ஆமை போலிவன் நல்லடகத் கத்தினை
ஆற்ற லோடுகொண்டுள்ளதைக் கண்டதால்
ஊமையாயிருந் தூக்கமாய்த் தம்மிடம்
ஓத நன்மொழி தம்மொடு கொண்டனன் 27

— அறிஞர் நாவலரை ஆய்வுக்குத்தன்னோடு கொள்ளுதல் —

நந்நெ டுஞ்செழி யன்தனைத் தன்றுணைக்
காக வைத்தவன் தந்திடும் ஆய்வினைப்
பொன்னெ னப்பெற எண்ணிய அண்ணனோ
போற்றிக் கண்ணெனத் தன்னொடுகொண்டனன் 28

— அண்ணா அறிக்கை விடுதல் —

அறிக்கை விட்டனன் அறிஞன் அண்ணனோ
அதைய றிந்ததும் தமிழகத்
தெருக்கள் முற்றிலுந் திகழ்ந்த மன்றங்கள்
திரண்டெ பூந்துழைத் துயர்ந்ததே! 29

— நிதி திரட்டுதல் —

விதியென் றோதிடும் மதியில்மூடரே
விதியென் றோதிடா திருக்கவே
நிதிதி ரட்டினன் நிதிதி ரட்டினன்
நெறிவ ளர்க்கவே திரட்டினன் ! 30

— நிதி திரட்டும் போதுரைத்தல் —

எக்குல மாயினும் மக்கள்
எனுமொரு நற்குல மென்றிங்கே
ஒக்கலா யன்புள மக்களாய்
ஓங்கிட ஆவன செய்வமென்றான். 31

— அண்ணாவின் உரை மாண்பு —

உடைந்த பின்கரை யோடும் நீரென
உரைத்த அண்ணனி னுரையினால்
அடைந்தி ருந்தவ ரெழுந்தா ராண்டவர்
அதிர்ந்தார் அத்தகு செயலினால் 32

நெறியைக் காத்திடும் பெரும்படை
— படையின் பெருக்கு —

திரண்ட மக்களின் பெருக்கைக் கண்டதும்
திரண்டொ ளிந்தன எறும்புகள்
திரண்ட வப்படை செல்லவே மலைகளும்
சிதைந்து மாவெனத் திகழ்ந்ததே ! 33

*— படையின் செயல் —*

நிலத்திற் பொன்னினை யெடுக்கச் சென்றவர்
வெடியில் லாதிருந் தமர்ந்தனர்
நிலத்தை விண்டிட ஒலித்தே செய்தது
நெறியைக் காத்திடும் பெரும்படை 34

*— படையின் பெருமை —*

பெரிய தோர்மலை யெழுந்து வந்ததோ?
பெரிய தோர்கடல் உருண்டு வந்ததோ?
கரிய பொன் முகில்தரையில் வந்ததோ?
கடந்தோர் மீண்டுமிங்(கு) எழுந்தாற்
போற்படை 35

*— படையின் பெருக்கம் —*

சொரியக் கையினை எடுத்து மண்டையின்
சுணப்பைப் போக்கிடத்துடித்தார் ஆயினும்
விரிவில்லாதவர் நெருங்கி நின்றதால்
விலாவின் பக்கமே கரமி ருந்ததே; 36

*—இதுவும் அது—*

தரையே தோன்றிடா துயர நின்று நாம்
தகுந்த கண்களால் விழித்து மாதவன்
தரையிற் பட்டிலன் தரையும் வேர்வையால்
சகதி யாய்நடத் தகுந்தி ருந்ததே! 37

## படையினர் உரையாற் பயன்

அரசி ருக்கையில் அமர்ந்தி ருந்தவர்
அறைந்த சொல்லையும் புரிந்த தீங்கையும்
முரசொ லித்திடும் முறையிற் கூறவும்
செவிடர் கூடநன் கறிந்து மாறினர். 38

—இயற் படை—

உரைக்குந் தன்மையாற் பிறவணிப் பெரியவர்
உருகாக் கன்மனம் பிறப்பிலே அமைந்தவர்
உணர்வற் றிங்கிருந் தெரிந்திடும் மரங்களோ (டு)
உணவை யுண்பதே தொழிலெனும் மனிதரும்
உரைப்பர் உம்மணி உயர்நெறி அணியென
உணர்வை யூட்டிடுந் தமிழ்க்குலத் தணியென
உடனே அவ்வணி யுறுப்பினன் எனும்பெயர்
உடமை கொண்டிட உளந்துடித் திடுவரே! 39

—இசைப் படை—

இசைக்க விப்படை யமர்ந்தவர் நிலத்தினில்
எழநி னைத்திலர் இடிமழை பொழியவும்
இசையா திவ்வணி நெறிவழி யொழுகிட
இருந்தோர் இசையினாற் கருத்தறிந்
திணைவரே
அசைக்க விட்டிடா தழகுடன் இசைப்பதால்
அதனைக் கேட்கவே துடித்திடும் மனிதரை
அடையத் தொண்டராய் இதுதுணை புரிந்ததே
அசையா மக்களே யசைந்திட இசைத்ததே 40

— கூத்துப் படை —

அமைச்சர் செய்துள தவறெலா முணர்த்தியே
அவர்கள் செப்பிய இழிமொழி பகரவும்
அவர்தாம் பெற்றுள முறையிலாப் பொருட்களை
அளிக்கக் காட்சியா யதையுணர்ந் திடுவரே
சமைக்க உண்டியைத் தவித்திடும் எளியவர்
தளர்ந்த தன்மையை மொழிந்தவர், தமிழினை
தரைக்குள் இட்டவர் பதவியில் இருந்ததை
தருந்த காட்சியா லுணர்த்தினர் சிறப்புற. 41

— படையெழுந்தது —

ஒழிக வெருதணி யுணர்வில் அமைச்சென
ஒலித்துக் கடகட வெனச்சிரித்
தழிக தமிழினை யிகழும் வடவரும்
அழிக எனச்சொலி யெழுந்ததே; 42

— முப்படையின் செயல் —

அரசு கட்டிலில் அறிஞனை யமர்த்திட
அகத்திற் கட்டினர் பெருமனை யதன்வழி
அடையக் கட்டிலை யரும்பணி புரிந்தனர்
அதுவே மட்டிலா மகிழ்வெனப் பகர்ந்தனர்
முரசு கொட்டிட விசைப்படை யியற்படை
முழங்க அண்ணனின் மனவெளுப் பனைத்தையும்
முறையில் ஆட்சியின் குறைகளைத் தெளிவுற
முழுதுங் கூத்தினால் உணர்த்தினர்
உணர்ந்தனர். 43

— அமைச்சர் அஞ்சுதல் —

உரைக்குந் தெளிவினால் ஒழிக்க அரசினை
உளத்தில் நினைத்தவர் கிளம்பவே
திரைக்குள் அமைச்சரும் மறைந்தார் மறமுடன்
தெருவில் நடந்திட நடுங்கியே ! 44

— மாட்டணியார் வருந்துதல் —

இசைக்கும் படையினால் இசையில் அரசினில்
இருந்த உறுப்பினர் விலகிப் பிறகதை
வசைக்கப் புகுந்தனர் வலிவில் லமைச்சரின்
வகையில் செயலினால் வருந்திக் கலங்கியே! 45

— கூத்தினாற் பயன் —

நடிக்குந் திறமையால் நலிந்த எளியரே
நகைக்க வரசினர் இழிவை எடுத்துரைத் (து)
இடிக்க அரசினர் இழிந்த பணியினை
இனிதாய்த் திருப்பினர் எழிற்கூத் ததனிலே ! 46

— அண்ணா இடியென முழங்குதல் —

தயங்கியோர் வாக்கை யினிதாய்
தரநினைத் தாண்டு துடிக்க
வியம்பினன் மேடை முழுதும்
இடியிடி யென்றே அறிஞன். 47

— இதுவும் அது —

அதிர்ந்தது மேரு மலையும்
அறிஞரின் மேடைக் குரலால்
உதிர்ந்தது தாரின் மலர்கள்
உடலசை வோடு பகர ! 48

— கழகக் குழுவின் செயல் —

பிளந்தது மண்ணும் ஒலியால்
பெருங்குழு செய்த செயலே
இழந்தனர் நெஞ்சில் உணர்வை
இனிதிலா தாண்ட வமைச்சர் 49

— புகைவண்டியின் குரல் —

தகையிலா தாண்ட வரசு
தகர்ந்திட போ ! போ ! எனவே
புகைதரு வண்டி யொலிக்கும்
புதுக்குரல் ஊ ! ஊ ! அதுவாம் 50

— மக்கள் நினைத்தல் —

அண்ணா உரைக்கும் உரையின் பொருளை
ஆய்ந்தோர் தமக்குள் அவர்தம் நெறியை
கண்ணாய் மதிக்க நினைத்தார் அரசைக்
கவினாய் அவர்க்குத் தரவும் நினைத்தார் 51

— தேர்தற் றலைவன் கருணாநிதி சொல்லாற்றல் —

மாண்டோன் எழுவான் ; மயங்கி விழுந்தோன்
வாங்கி வருவான் தெளிவை ; அமைச்சர்
ஆண்ட பொழுதும் அவையிற் கலைஞர்
அறைந்தால் வருவர் நயத்தை நினைத்தே ! 52

— தேர்தற் பணிபுரியக் கலைஞர் புறப்படுதல் —

கருணா நிதிதன் கடமை புரியக்
கால்வைத் தெழுந்தான் தெருவிற் சிறுவூர்
பெருமன் றமதில் நகரில் எளியோர்
பெருஞ்சே ரியதில் உரைத்தான் சிறந்தே ! 53

— கலைஞர் கூக்குரல் —

உண்ண உண்டியுண்டா மெய்யை மூடிடத்தான்
உண்டா ஒருடையும் என்றவன்
பன்னக் கேட்டவர்கள் பன்னி ஆமெனவே
பார்ப்போந் தேர்தலிலே என்றனர். 54

— இதுவும் அது —

பெற்ற தாய்நிலத்தைப் பேணும் எண்ணமுண்டா
பேசுந் தாய்மொழியைக் காத்ததா !
கற்ற மாணவர்க்கு வேலை யீந்ததுண்டா
காளை மாடுபின்னு மாள்வதா ? 55

*— மக்கள் முடிவெடுத்தல் —*

என்று நற்கலைஞன் ஏற்ற சான்றுடனே
ஏறிப் பேரவையிற் கூறவே
நன்றன் றென்றுமக்கள் நாவாற் கூறியபின்
நன்றாய்க் கைகளையுங் கொட்டினர். 56

*— வசை கேட்ட மறுமகள் —*

இசைகேட்ட பெருநாகம் இருப்பதைப்போல்
இருந்தார்கள் பொதுமக்கள்; அரசாள்வோ ரோ
வசைகேட்ட மறுமகள்போல் அரசை விட்டு
வருகின்ற நிலையடைந்துந் துணிந்து
நின்றார். 57

*— அண்ணா அணி புலியாக எழுந்தது —*

உளியாலும் மலையுடையும் எனச்சொல் வார்தம்
உரைகற்ற அறிஞரணி பதுங்கிப் பாயும்
புலியாகச் சினந்தெழுந்து பகர்து நாடு
புகழ்காணத் துடித்தெழுந்த திதுவும் மெய்யே ! 58

*— கருணாநிதியின் கவின்மிகுபணி —*

மாடி புகுந்தும் எளியோ ரிருக்கும்
மனைக்குட் புகுந்தும் கருத்தை யுரைத்து
வாடி யிழைத்த வறுமை பகர்ந்தும்
வாக்கை யடைய உழைத்தான் நிதியே ! 59

— கலைஞர் அணி —

நடையாய் நடந்தவர் நவின்றார் குறையை
நகரிற் றெளிவுடன் சிற்றூரிற்
படையாய்த் திரண்டவர் வரவே முறையாய்
விழித்தார் பலரதை நின்றங்கே ! 60

— மாட்டணியினர் புலம்புதல் —

மாட்டின் அணியதில் மகிழ்வாய் இருந்தோர்
வரக்கண் டிப்படை மனநொந்தே
ஆட்சி யினிநமக் கில்லை யியக்கமும்
அழியு மெனமொழிந் திட்டாரே ! 61

— இதுவும் அது —

தயங்கி யிருந்தவர் தகர்க்க வரசினைத்
தயங்கா தெழுந்தது துரையண்ணா
மயங்க உரைத்திடுந் திறமே என அவர்
மடியும் நிலையினை யுணர்ந்தாரே ] 62

— மாட்டியக்கத் தொண்டர்கள் தங்கள் அமைச்சர்களிடம் மொழிந்தது —

கழகப் பெரும்படை திரண்டே அரசினைக்
கவிழ்க்கப் புகுந்ததை யறிந்திங்கே
அழகுப் பொருட்களால் மயங்கும் அமைச்சரே
அழிவை யுறுதியென் றுணர்ந்தீரோ ? 63

— இதுவும் அது —

தமிழை யிகழ்ந்ததை தமிழ்மண் தமிழ்ப்பெயர்
தனையு மிழந்துள நிலையெல்லாம்
அமிழ்தச் சுவையுடன் அறைந்தே யரசினை
அகற்ற நினைத்ததை மறந்தீரோ? 64

—அத்தொண்டர் நிலை—

தொடையும் நடுங்கிடத் துணிவை யிழந்தனர்
துடிக்கு மிதயமுந் துடிப்பிழக்க
நடையில் விரைவும் நாவிற் றெளிவும்
இழந்து புலம்பினர் படைகண்டே! 65

——அரசாண்டோர் நிலை—

மாட்டணியில் அரசாண்டோர் விடுதலையைப்
புவிக்கீந்தோர் வலிவில் லாமல்
கேட்டவுடன் மெய்சிலிர்த்தார் விழிசிவக்க
வழியறியாக் கிறுக்க ரானோர். 66

—துணிவடைதல்—

கிறுக்கரைப்போல் விழித்தாலும் விடுதலையைப்
பெறுவதற்குக் கிளம்பும் போது
நறுக்கான மீசையுடன் இருந்தநிலை
தனையெண்ணி நடக்க லானார். 67

— இதுவும் அது —

போட்டியிட்ட வமைச்சரெலாம் விலகிடாமற்
றுணிவுடனே போட்டி. யிட்டார்
மாட்டணிக்குள் இருந்தசிலர் விலகிடுங்கள்
எனவுரைத்தும் மறுத்தா ரன்னோர் ! 68

—அமைச்சர்கள் மொழிந்தது —

விடுதலையைப் புவிக்களித்தோம் அணைகளையும்
எழுப்பியுள்வோம் விருப்பாய்ச் செல்ல
கொடுமுட்கள் தனையகற்றி நெடுஞ்சாலை
யமைத்துள்ளோம் விலகோ மென்றார். 69

—இதுவும் அது—

அனைவருக்கு மெழிற்கல்வி யளித்துள்ளோம்
விளக்கிட்டோம் அடுத்த நாட்டார்
சினமகற்றி நடுவுநிலை யமைவதற்கு
சிறந்தபணி செய்தோ மென்றார். 70

—அமைச்சர்கட்குத் தெரிந்தவ மொழிந்தது—

என்று கூறிய கூற்றைக் கேட்டதும்
நன்று கூறுவன் கேளென் றுரைத்தனர். 71

—இதுவும் அது—

போட்டி யிட்டுநீர் கற்போ னோடுநீர்
ஈட்ட வில்லையேல் வெற்றி சிறந்ததோ ? 72

—இதுவும் அது—

கூட்டாய்ச் சேர்ந்துள கட்சி யனைத்தையும்
நாட்டு மக்களும் வேண்டுவர் போலுமே! 73

(மாட்டியக்கப் பெருந்தலைவர் மாண்புமிகு காமராசர்)
—மொழிந்தது—

தூங்கினாலுந் தேர்தலிலே வென்றிடுவேன்
தோல்வியெனுஞ் சொல்லறியேன் சொல்வேன் துணிந்து
வாங்கிடுவேன் நல்வாக்கை மக்களிடம்
என்றுகா மராசரவர் சென்னார் மகிழ்ந்து. 74

—மாட்டணித் தொண்டர்கள் எழுச்சியடைதல்—

இந்தியாவின் மாட்டியக்க ஏற்றமிகு
நற்றலைவன் காமராசு சொல்ல இதனை
சிந்துதற்கு மிரத்தமதைச் சீறி விட்டார்
மாட்டணியார் தேர்தலிலே நின்றார் சினந்து 75

—காமராசர் உரமூட்டுதல்—

ஆங்கிலேயர் ஆட்சியையே போக்கினோம்
துணிவுடனே ஆண்டுவந்தோம் நாட்டை யழகாய்
தாங்கிடாதா தோற்றிடுவோம் நம்மவர்
தமையெதிர்த்துத் தேர்தலிலே சான்று தருவீர்! 76

காமராசர் பணித்தது

கூடுக துணிவுடனே கூடுக
கொடுத்திடுக நம்மவர் அரசின் பணியை
பாடுக புவியறியப் பாடுக
பணிபுரிந்த மாட்சியைக் குறித்துச் சிறப்பாய்! 77

மாட்டியக்கப் படைச்சிறப்பு

பகர்ந்ததுங்கா மராசவர்தம் திருநாவும்
மறமுடனே படைதிரண்டு வந்து பணிவாய்
தகர்ந்துவிடுங்கூட்டணி எனவுரைத்
துறுதியுடன் சென்றதால் தகர்ந்ததுலகே! 78

— இதுவும் அது —

எதிரணி ஒழிகவே என அவர்
இயம்பிய ஒலியினால் மலைகளுமே
உதிருமோ எனஅரி ஒலிக்கவே?
ஒளிந்தன விலங்குகள்; பதறினவே! 79

— இதுவும் அது —

அமைச்சருந் திரண்டிட் அவர் வழி
அணிகளுந் திரண்டிட மகளிருமே
சமைப்பதை நிறுத்திவந் தணியினை
விழித்தனர் நடுங்கிடும் பெரும்படையே! 80

—இதுவும் அது—

கரங்களின் ஒலியதே கடகட
　　கரைந்திடும் எதிரணி யொழிக வென்றே !
மரங்களின் முறிவொலி 'சடசட
　　வருகிற வணியடி யொலியிதுவே. 81

— தேர்தற் கெழுந்தது —

கொடும்புலி உறுமிடும் நிலையொடு
　　குறையிலா எருதணி திரண்டதங்கே
கடும்பகை யிருப்பினும் அரசினைக்
　　கரத்தினி லடைந்திட எழுந்ததங்கே ! 82

## 10. தேர்தல் பாடியது

[ஊர்திகளில் வாக்களிக்க மக்களை அழைத்து வருவதும் செல்லும்போது நடக்க வைப்பதும் போன்ற தன்மைகளை கூண்டு பட்லாம்.]

மாட்டணியின் உறுப்பினரும் மறமுட்னே
　　எதிர்நின்று வரநி னைக்கும்
கூட்டணியின் உறுப்பினரும் பொதுத்தேர்தற்
　　பணிசெய்தார் குறிக்கோ ளோடு ! 1

— அணியினர் செயல் —

காலிழந்த முதியவரைக் கரங்களிலே
தூக்கிவந்து களத்தில் இட்டே
ஆளுதற்குச் சிறப்புடனே தமதுஅணி
வாக்கதனை யளிக்க வைத்தார் ! 2

— இதுவும் அது —

மார்பினிலே தமதணியின் எழிற்சின்னந்
தனைப்பூட்டி மகிழ்வாய் நீண்ட
சீர்மிகுந்த கரங்களிலே கொடிபிடித்து
வாக்கதனைச் சேர்த்தார் ஓடி ! 3

— இதுவும் அது —

ஊர்தியிலும் திரியாழி மிதிவண்டி
தனைக்கொண்டும் உயர்ந்த வாக்கைச்
சேர்ப்பதிலே எருதணியும் எதிரணியும்
பணிபுரிந்து திரிந்த தாங்கே ! 4

— கடும் எதிர்ப்பு —

இருபெரு மணிகளும் எதிர்க்கவே
எதுவரும் எனப்பலர் வினவினர்
எருதணி வருமெனப் பகர்ந்தவாய்
எதிரணி வருமெனப் பகர்ந்ததே ! 5

— இதுவும் அது —

எதிரணி வருமெனப் பகர்ந்தவாய்
எருதணி வருமெனப் பகர்ந்ததே !
எதுவரும் எனவினாக் கொடுத்தவாய்
இதுவரும் எனச்சொல மறுத்ததே ! 6

— மாட்டணியார் உரைத்தது —

எருதணியமைச்சருந் தெருக்களில்
இயம்பினர் தமதரும் உழைப்பையே
கருதிடும் பணிகளை முடிப்பதாய்
கரைந்தனர் அரசினைப் பிடிக்கவே ! 7

— கழக அணியின் செயல் —

திராவிட ரெழிலணி முயற்சியாற்
சிறப்புடன் இணைந்துள அணியெலாம்
வராமலே எருதணி யகன்றிட
மனந்துடித் துழைத்தது புலம்பியே ! 8

— உழைப்பாற் களைப்புறுதல் —

உழைத்தவர் களைத்தனர் இரண்டு நாள்
ஒழிந்ததும் நடந்ததோர் தலிலவர்
அழைத்தது முதவிடும் குணத்தினை
அடைந்தவர் வரப்பணி புரிந்தனர். 9

— அனைத்தணியினரின் நினைப்பு —

முதிர்ந்தவர் மெலிந்தவர் உறுப்பினை
யிழந்தவர் முதலியோர் தமையும் அழைத்தார்
எதிர்த்திடும் உறுப்பினர் நடுங்கிடப்
பதவியை எழிலுடன் அடைய நினைத்தே ! 10

— கடுப்படைதல் —

எருதணி எதிரணி இரண்டுமே
உழைத்தன எழிலுடன் இதன்போல் நினைத்தே
உறுமினர் எதிரணி யினர்தமை
விழித்ததும் ஒழித்திட நினைத்த கடுப்பே ! 11

— இரண்டணியினரின் குரல்

கரங்களிற் கொடிகளைப் பிடித்தவர்
நடந்தனர் களிப்புடன் தமக்கே யரசை
தரும்படி யுரைத்தனர் தமதணி
யுழைத்திடுந் தகைமிகு அணியென் றுரைத்தே ! 12

— பணங் கொடுத்தல் —

பதவிதனை யடைவதற்கே உணவிட்டார்
பணங்கொடுத்தார் பலபே ரானால்
உதவுதற்குப் பதவிதனை விரும்பியவர்
சிலரிருந்தார் உயர்ந்த நெஞ்சால் ! 13

*— மக்களின் வகை —*

பணத்திற்கே அடிமையென வாக்கை விற்கப்
பலரிருந்தார் பணம்படைத்தோர் பதவி பெற்றார்
குணத்தினது திறமறிந்து கொடுக்க எண்ணும்
குறிக்கோளை யுடையவரும் இருந்தா ராங்கே! 14

*— இயக்கங்களின் மேன்மை —*

இயக்கமெலாம் பொதுமக்கள் உயர்வதற்கே
எழுந்ததிதிற் புரட்டில்லை இயக்கந் தன்னை
யியக்கி வருந் தலைவரெலாம் இனியர் ஆனால்
இணைந்தவராற் பிழையுண்டு இருக்காதாமோ? 15

*— திருநாள் வரும்நாள் —*

தொண்டுள்ளம் உடையவரே இயக்கந் தன்னில்
துணிவுடனே பணிபுரிந்தால் இயக்கமெல்லாங்
கொண்டுள்ள குறிக்கோள்கள் நிறைவு பெற்று
குடியுயருந்திருநாளும் வருமே இங்கு! 16

*— அணிகள் உறுப்பினர் பெயர்களை அறைதல்*

உறுப்பினர் பெயர்தனை யணியெலாம்
உரைத்தனத் தெளிவுற வணியினர்
பொறுப்புடன் தமதணி யரசதன்
பொறுப்பினை யடைந்திட வுழைத்தனர். 17

— உறுப்பினர் நினைப்புஞ் செயலும் —

உரிமையைத் தமதணி யடைந்திட
உறுப்பினர் மகிழ்வுடன் நினைக்கவே
பரிவுடன் எளியவர் மனைகளிற்
பகர்ந்தனர் தமதணிச் சிறப்பையே! 18

— இதுவு மது —

உறுத்திடும் பசியினை யொழித்திடும்
உயர்பணி புரிந்திடுங் கருத்திலே
உறுப்பினர் உருவினைச் சுவர்களில்
உயர்வுடன் வரைந்தனர் விரும்பவே! 19

—இதுவு மது

அமைச்சரின் பிழைகளைப் படங்களாய்
அழகுடன் வரைந்தனர் அடுப்பிலே
சமைத்திட வரிசியில் நிலையையுஞ்
சமைத்தனர் படங்களில் விளங்கவே! 20

— சிறிய அணிகள் இணைதல் —

சிறிய இவ் வணியெலாம் இணைந்தன
சிதைந்திட எருதணி நிலத்திலே
முறியடித் தொழித்தபின் முறையுடன்
முதிர்ந்தநல் லரசினை யமைக்கவே! 21

— மக்கள் ஏக்கங் கொள்ளுதல் —

வாக்கை யிட்டுநல்ல மாண்பு மிக்கவரை
மாண்பா யாள்வதற்கு மக்களும்
ஏக்கங் கொண்டிருந்தார் ; தேர்ந்தெ டுக்க வாக்கை
ஏற்ற சின்னமதிற் குத்தியே ! 22

— மக்கள் வாக்களித்தல் —

இதனை இதனால் இவன்முடிக்கும்
எனநன் கறிந்து வாக்களித்தார்
பதவிகிடைத்த வுடனேயே
பணியா தவர்தோற் றொழியவே. 23

— எளியோர் திருநாள் —

எளியவரைப் பணம்படைத்தோர் வணங்கும் நாளாய்
இருந்தஒரு திருநாளே தேர்தல் நாளாம்
எளியவரின் அடிகளையும் தலையாற் றீண்டி
இரப்பார்கள் வாக்கதனை இனிக்கப் பேசி ! 24

இருவகை யுறுப்பினர் —

எளியவரின் நலமொன்றே யுயிரென் பாரும்
இருந்தார்கள் அவர்களையே எடுப்பார்தேர்ந்து
வலியவரும் வருவார்கள் தேர்த லென்றால்
வந்தவர்கள் மறுதேர்தல் வரைக்கும் வாரார் ! 25

— பொதுமக்கள் வாக்களித்துப் புறப்படுதல் —

பொதுமக்கள் வாக்களித்துப் புறப்பட்டார்
மனைநோக்கிப் புலம்பிக் கொண்டே
எதுவாகும் முடிவென்று மனநொந்து
கலங்கியவா றெதிர்பார்த் தார்கள் 26

— அனைத்தணியினரின் இழிசெயல் —

ஊர்தியிலே பொதுமக்கள் தமையேற்றி
வாக்கதனை யுரிமை யாக்கி
ஊர்தியிலே யேற்றாமல் மனைநோக்கி
நடக்கவைப்பார் உண்மை யுண்மை! 27

— தொண்டர் கொடுமை —

வாக்குள்ளோன் வெளியூர்க்குச் !சென்றிருந்தால்
வழங்கிடுவான் அவன்வாக்கையடுத்தோன்வந்து
நோக்கமெலாந் தமதணியின் வெற்றி யென்று
நினைத்ததனாற் பெருந்தவறுஞ் செய்தா
ராங்கே! 28

— முடிவறியத் துடிதுடித்தல்

அணியினரே முடிவறியத் துடிதுடித்து
வானொலியின் அருகே சென்றார்
மணிமொழியைச் செவியுற்று மகிழ்ந்தவரை
வருந்தியோரை வரைய லாமே! 29

## 11. வாகை பாடியது.

[அண்ணாவின் முப்படையால் ஆண்ட அணியின் தலைவனே தோற்றான். ஆண்ட அமைச்சர்கள் தோற்றனர். பரணி மல்லர்கள் வென்றனர். குமுகாயத்தின் கோடியில் நின்றவனைப் "பொறுப்பு" தேடிவந்தது.]

*— பரணியின் தலைவன் அண்ணா வெற்றிபெறுதல் —*

தொண்டு செய்யுந் தூய உள்ளத்
தோடு போட்டியிட்டதைக்
கண்டு மக்கள் தேர்ந்தெ டுத்தார்
காஞ்சி தந்த அண்ணனை! 1

*—இதுவும் அது—*

உமிழ்ந்த போதுஞ் சுட்ட போதும்
உண்மையான தொண்டினால்
தமிழைக் காத்த தங்க அண்ணா
தாங்கி னானே வெற்றியை. 2

*— மாட்டணித் தலைவர் காமராசர் தோற்றது —*

பூனை யோடு போர்பு ரிந்த
வேங்கை தோற்ற தன்மையில்
ஆணையிட்ட காம ராசர்
அன்னை யூரில் தோற்கவே! 3

— தமிழக முதல்வர் தோற்பது —

குண்டு கொண்டு கற்றோர் தம்மைக்
கொன்ற பக்த வச்சலம்
குண்டில் லாது வாக்கால் மக்கள்
கொல்லத் தோற்றார் தேர்தலில் 4

— சீரொடு நடந்து வெற்றி பெறுதல் —

முயலைப் போல காம ராசர்
முந்தி டாமற் றூங்கவே
நயன்மை யாக வாள அண்ணா
ஆமை போன்று வென்றனன். 5

—அரசுக் கட்டிலில் எளியோர் அமர்தல் —

செல்வர் கட்கே சொந்த மான
சீர்மி குந்த கட்டிலில்
நல்லபண்பன் அண்ணா வாலே
ஏழைத் தொண்டர் குந்தினர். 6

— இதுவும் அது —

அண்ணாவோடு மாண்பு மிக்க
அன்புத் தம்பி மார்களும்
பொன்னாம் வாக்கைப் பெற்று நல்லோர்
போற்ற வாள வந்தனர். 8

— அண்ணாவின் மாண்பு —

இட்ட வேலை முற்றுஞ் செய்ய
ஏற்றம் மிக்க தொண்டரைத்
திட்ட மிட்டுத் தேர்ந்தெ டுத்த
சீர்மி குந்தோன் அண்ணனே ! 9

— தொண்டுள்ளங் கொண்டோர் வென்றனர் —

தொண்டு தொண்டு தொண்டே யென்று
தூங்கும் போதுஞ் சொல்லிடுந்
திண்டோள் வீரர் தம்மை மக்கள்
தேர்ந்தெ டுத்தார் தேர்தலில் 10

— இதுவும் அது —

வாடிப் போன மக்கள் வாட்டம்
வாடிப் போகத் தேர்தலில்
கோடி வெற்றி யேழை மக்கள்
கூடித் தந்த வெற்றியே ! 11

— அண்ணாவின் தன்மை —

யார்நி லத்தை யாண்ட போதும்
அண்ணா நெஞ்செ ரிப்பொடு
பார்ஒ ழித்து விட்டு மண்ணைப்
பற்று வேனென் றோதிடான் 12

— இதுவும் அது —

நேர்மை யான அண்ணன் அண்ணா
நெஞ்சில் அஞ்சி யோடிடான்
சீர்கு லைக்கும் ஆட்சி தன்னை
சீறி வந்து போக்கவே ! 13

— மற்ற அமைச்சர்கள் தோற்பது —

இராமை யாவும் சோதி யம்மாள்
என்ற பெண்ண மைச்சரும்
தராமை யாலே வாக்கை மக்கள்
தாழ்ந்து போனார் தேர்தலில் 14

— இதுவும் அது —

மசீத்மன் றாடி வெங்கட் ராமன்
வாரா மற்றோற் றோடவே
பசித்தோர் வாக்க ளிக்கா தங்கு
பார்த்தார் கேலிக் கண்ணிலே ! 15

*— திரைக்கூத்தன் மருத்துவமனையிலிருந்தே வெற்றி பெறுதல் —*

மருத்துவ விடுதியில் தங்கியும் வெற்றியை
மகிழ்வுடன் அடைந்தவன் சத்தியா செல்வனே
கருத்தினில் எளியவர் தம்மையே யெண்ணிடும்
கலைஞனே இனியனே சந்திரன் வள்ளலே 16

*— திரைக்கூத்தன் இராமச்சந்திரன் மாண்பு —*

இராமச்சந் திரனவன் மற்றவர் துன்புற
இவனமு தவர்களின் தொல்லையைக் கொல்லு வான்
தராதநாள் இருந்ததெ னச்சொலின் சந்திரன்
சலிக்குமுன் இருந்ததே என்றுதான் பன்னுவர் 17

— இதுவும் அது —

பெயரினைப் பகர்ந்ததும் மக்களின் கண்களிற்
பெருமழை வடிந்திடச் செய்தவன் சந்திரன்
நயமுடன் உரைத்திடும் நல்லவன் மக்களின்
குருதியிற் கலந்தவன் வெற்றியைத் தட்டவே 18

— இதுவும் அது —

சந்தி ரன்வந் தாலோ மக்கள்
காணச் செல்வர் கூட்டமாய்
இந்த நாட்டில் யார்வந் தாலும்
இந்தக் கூட்டம் கூடுமோ?

— இதுவும் மது—

மாற்றுக் கட்சி நண்பர் கூட
வந்து கூடிப் போற்றினால்
தோற்றா போவார்? மாற்றுக் கட்சித்
தொண்டர் கூட விட்டிடார் 20

— அண்ணா ஈடில்லாத தொண்டன் —

ஏற்றம் மிக்க சந்திரன் போல்
ஏற்றம் மிக்க தொண்டரை
ஏற்ற நல்ல அண்ண னன்றோ
ஈடில் லாத தொண்டனாம்! 21

— அண்ணா அரசைப் பெற்றான் —

எளியவர் அரசினைப் பெற்றனர் வெற்றியை
இழந்தவர் வருந்தினர் மக்களின் தன்மையை
தெளிவுடன் அறிந்தனர் செந்தமிழ் மக்களின்
திறமறிந் தரசினைச் செய்திடாத் தன்மையால் 22

— மக்கள் மதியொடு பணிசெய்தல் —

பிறந்தது முதற்சிலர் பற்றியுங் கட்டிலைப்
பிடுங்கிட இழந்தனர் அண்ணனின் தொண்-
டினால்
சிறந்தநற் பணிகளைக் கண்டதால் மக்களும்
தெளிந்தநன் மதியொடு செய்தன ரிப்பணி 23

— இதுவும் அது —

சீர் மிகுந்த தலைவன் றுரையையே
தேர்ந்தெடுத்தார் சிறப்பாய் இருக்குமென் (று)
ஓர்ந்துணர்ந்தோர் தமிழ்நா டுயரவும்
உன்னியவனை எடுத்தார் உணர்விரே ! 24

— தேர்தல் நாளில் அமைச்சர் நிலை —

எலிகள் விரட்டவே ஓடும் பூனையாய்
இருந்தனர் அமைச்சரோ தேர்தல் நாளிலே
புலிகள் அரண்டதைப் போல மைச்சரும்
புலம்பி யகன் றனர் தோற்றுப் போகவே ! 25

— மக்கள் நிலை —

அரசை யளித்தனர் ஆளச் செப்பியே
அருமைத் தமிழ்மொழி வாழச் செப்பியே
முரசை யறைந்தனர் நாளும் வெல்லவே
முதிர்ந்த அறிஞரின் பேரைச் சொல்லியே ! 26

— பரணி மல்லர்களைப் பாடுவோம் —

பேரறிஞர் அண்ணா வெற்றி பெறுதல்
தென் சென்னைத் திருமண்ணில் அறிஞரண்ணா
சிறப்புடனே தேர்ந்து வந்தான்
தன்மண்ணைப் பேணுதற்கு விலகிவிட்டு
முதலமைச்சாய்த் தலைமை யேற்றான். 27

— 'முரசொலி' மாறன் வெற்றி பெறுதல் —

விலகிட்வே முரசொலிநன் மாறனவன்
மறுமுறையும் வென்றான் ஆங்கே
பலதடவை யிடைத்தேர்தல் நடந்தாலும்
மறப்பதில்லை பகலோன் தன்னை! 28

— பேராசிரியர் அன்பழகனார் வெற்றி பெறுதல் —

துன்பமு றுந் தழிழ்மக்கள் இன்பமுறத்
துடித்தெழுந்த தூய ஆசான்
அன்பழகன் திருச்செங்கோ டெனுமூரில்
அகமழிந்தே அனுப்பப் பட்டான். 29

— நாஞ்சில் மனோகரன் வெற்றி பெறுதல் —

வட சென்னைத் தொகுதியிலே மனோகரனாம்
பெருந்தொண்டன் வலிமை மிக்கோன்
கடமையோடு பணிபுரியுங் கருத்துடையோன்
பெருவெற்றி கண்டான் கண்டோம்; 30

— இரா-செழியன் வெற்றி பெறுதல் —

கும்பகோணந் தொகுதியிலே இரா. செழியன்
நெடுஞ்செழியன் குருதி பெற்றோன்
தெம்புடனே போட்டியிட்டுப் பெரு வெற்றி
தனைப் பெற்றான் சிறந் தோன் பேச்சில்! 31

— 'திருவிளக்கு' இராசாராம் வெற்றிபெறுதல் —

இராசாராம் எனும்நல்லன் சேல மென்னும்
எழிலான ஊரினிலே போட்டி யிட்டு
தராதமக்கள் கூடவாக்கைத் தரவே வென்றான்
தமது பணி தமிழுயரத் தானே என்றான்! 32

— குசேலர் வெற்றி பெறுதல் —

குசேலர் வேலூர் எனுமூரில்
கொண்டார் வெற்றி தனைநன்றாய்
கசடில் லாமல் கற்றதனாற்
கண்ணாய்க் கழகந் தனைநினைத்தார். 33

— கந்தப்பன் வெற்றி பெறுதல் —

மேட்டூரிற் கந்தப்பன் வெற்றி பெற்றான்
விண்டுவிடத் தில்லிமண்ணுந் தமிழர்க் காக
பாட்டோடு நமது நிலை தனைப்ப கர்ந்து
பதவிதனை யிழப்பதற்குந் துணிவான்
எங்கோன் ! 34

— சிட்டிபாபு வெற்றி பெறுதல் —

செங்கற்பட் டென்றவூரிற் சிட்டிபாபு
தேர்ந்தெடுக் கப்பட்டான் தில்லி சென்று
பொங்குகடல போற்றமிழின் புகழைச் சொல்லப்
புறப் படவே அவன் வந்தான் சிறந்த
மல்லன் ! 35

*— சோமசுந்தரக் கோபாலன் வெல்லுதல் —*

சோமசுந்தரக் கோபாலன் தஞ்சை மண்ணில்
தோற்கடித்தான் தொழிலமைச்சர் வெங்கட்ராமை
நாமத்தாற் பெரியவனாய் இருப்பதைப் போல்
நமதுபெரும் அமைச்சரையும் எளிதாய்
வென்றான் 36

*— சம்பந்தன் வாகை சூடுதல் —*

திருத்தணியிற் சம்பந்தன் வெற்றி பெற்றான்
தேன்றமிழை யுயர்த்துதற்குப் பற்றுக் கொண்ட
கருத்தறிந்த தமிழ் மக்கள் அவனைத் தில்லி
கண்டிடவே அனுப்பி வைத்துக் களிப்பைக்
கொண்டார் 37

*— சாமிநாதன் வாகை சூடல் —*

கோபிசெட்டி பாளையத்திற் சாமிநாதக்
குரிசிலவன் சுப்பிரமணி யத்தை வென்றான்
பாவிகளோ அரசியலாற் பதவி பெற்று
பணம்பறிக்குங் கொடுமைதனைக் கடிவான்
அன்னோன் 38

*— சிவசங்கரன் வெற்றி பெறுதல் —*

திருப்பெதும்பூர் தொகுதியிலே சிவசங்கரன்
தெரிந்தெடுக்கப் பட்டான் மக்கள்
விருப்பறிந்து செயல்புரிய விருப்புள்ளோன்
தெளிந்த - நல்லன் சிறந்த மல்லன் 39

— அன்புச் செழியன் வெற்றி பெறுதல் —

திண்டுக்கல் தனிலன்புச் செழியன் வந்தான்
சிறப்பாக உரையாற்றுந் திறமும் மக்கள்
கொண்டுள்ள கருத்ததனைத் திருப்பித் தன்வாய்
கூறுகின்ற கருத்து வழிச் செலுத்து வானே ! 40

— மாயவன் வெல்லுதல் —

மாயவன் வெற்றி பெற்றான்
மாண்புள சிதம்பரத்தில்
தூயவன் பணிகள் செய்யத்
துடிப்பவன் இனியன் மெய்யே ! 41

— கடலூர் கிருட்டிணமூர்த்தி வெற்றி பெறுதல் —

கட்லெனும் ஊரில் நல்லன்
கிருட்டிணமூர்த்தி வென்றான்
உடலொடு உயிரும் இந்த
உயர்தமிழ் நாட்டிற் கென்பான் ! 42

— தண்டபாணி வாகை சூடுதல் —

தாம்பரந் தொகுதியிலே தண்ட பாணி
தரப்பட்டார் மக்களினால் தில்லி சென்றே
ஓம்பிடுங்கள் தமிழையென மக்கள் சொல்ல
உறுதியென்றே யிவன் சொல்லி யுயர்வாய்
வென்றான் 43

—கமலநாதன் வெல்லுதல்—

கிருட்டிண கிரியில் நல்ல
கமலநன் நாதன் வென்றான்
உருட்டியே விட்ட போதும்
உணர்வுடன் எழுவான் வீரன் 44

—தெய்வீகன் வெற்றியில் திகழ்தல்—

கள்ளக் குறிச்சி நன்மண்ணில்
கண்டான் வெற்றி தெய்வீகன்
உள்ளத் தாலே நம்நாட்டின்
உயர்வை எண்ணி மனமகிழ்வான்! 45

—சுப்பிரவேலு வெற்றி சூடுதல்—

மாயூர மண்ணில் அன்புச்
(சுப்பிர) வேலு வென்றான்
வாயூரச் சொல்வான் சொல்லை
வழி முறை தனையுஞ் செல்வான் 46

—துரைராசு வெற்றியைப் பெறுதல்—

பெரம்பலூர்த் தொகுதி தன்னில்
பெருந்தகை துரைரா சென்பான்
வரப்பிலா நிலையைப் போக்க
வழங்கிய வாக்கால் வென்றான். 47

— கிருட்டிணன் வெல்லுதல் —

உடுமலை நாராயணனை
உயர்வுள பொள்ளாச்சி மண்ணில்
கொடுந்துயர் தன்னைக்கூறக்
கொண்டு வந்தாராம் மக்கள் 48

— நாராயணன் வெற்றி பெறுதல் —

சிவகெங்கைத் திருமண்ணில் கிருட்டிணன்றான்
சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான் என்று
கவலையுற்றார் எருதணியார் காழ்ப்புக் கொண்டார்
கழகத்தின் பெருவெற்றி தனைத்தா மெண்ணி 49

— இராமச்சந்திரன் வெற்றி பெறுதல் —

திண்டிவனத் தொகுதிதனில் இராமச் சந்திரன்
தெரிந்தெடுத்தே யரசாள அனுப்பப்பட்டான்
கண்டிப்பான் பிழைபுரிந்தாற் கடுஞ்சொற் கூறான்
கழகத்தின் வளர்ச்சிக்கோ உயிரு மீவான் 50

— முத்து வெற்றி பெறுதல் —

திருப்பத்தூர்த் திருமண்ணில் முத்தென் பாரைத்
தெரிந்தெடுத்தார் கழகத்தின் சின்னந் தன்னில்
விருப்போடு வாக்களித்து வறுமை மாள
வேண்டுமென உரைகொடுத்து வணங்கி நின்ற 51

— விசுவநாதம் வெற்றி பெறுதல் —

வந்தவாசித் தொகுதியிலே விசுவ நாதம்
வரக்கண்டு தமிழ்மக்கள் உளம கிழ்ந்தார்
இந்திமொழி தமிழிடத்தை எடுப்ப தற்கு
எந்நாளும் இயலாதாம் இவரால் என்றார் 52

— அண்ணா தேர்தல் —

இருபத்தைந் திடங்களிலே போட்டி யிட்டோர்
இருபத்தைந்திடங்களிலும் வென்றா ரென்றால்
அறுபத்தேழ் பொதுத்தேர்தல் எனச்சொல் லாமல்
அறிஞரண்ணா தேர்தலென அறைய லாமே! 53

— சிறப்பெனக்கே —

புவியினிலே ஒரு தேர்தல் இதனைப் போல
புகழுடனே அமைந்ததுண்டோ புகலு வீரோ?
செவிகுளிரக் கவிதை தரும் அறிஞனுக்குச்
சிறந்த தமிழ்ப் பரணி பாடின் சிறப்பெ னக்கே!
54

## —12. ஆண்ட மாண்பு—

[ஆளவந்த அண்ணா பொறுப்போடுஞ், சுறுசுறுப் போடும் ஆண்டான். சீர்திருத்தத் திருமணத்தின் வேர் வளர நீர் வார்த்தான். தமிழ்நாடு எனற பெயரைத் தாயகத்திற்குச் சூட்டினான். தமிழுக்குத் தலையாய விழா எடுத்தான், இவ்விதமாக அண்ணா ஆட்சி புரிந்த மாட்சியை ஈண்டு பாடுவோம்]

ஆண்டான் கழகந் தனைமாண்பாய்
அரசும் புரிந்தான் மிகமாண்பாய்
ஆண்டான் எழுத்தை மிகமாண்பாய்
அண்ணா துரையாம் பேரறிஞன். 1

—இதுவும் அது—

முடிக்கச் செயலைச் சிறப்பாக
முதிர்ந்த "குறளார்" பகர்ந்தது போல்
இடிக்குந் துணையார் தமைப்பெற்றே
எதிர்ப்போர் இல்லா தவனாண்டான்! 2

—அண்ணா சொன்னோர் சொற்காத்தல்—

நன்றாய்க் கட்சி தனையாண்டோன்
நாட்டை யாளத் தெரியாமற்
சென்றா விடுவான் எனக்கற்றோர்
சொன்ன மொழியை யவன் காத்தான் 3

—வரியைக் குறைத்தல்—

இருந்த வரியைக் குறைத்திட்டான்
இடவே யில்லை வரியானால்
திருந்தக் கற்ற மதியாலே
சிறப்பாய் ஆண்டான் கேளம்மா! 4

— இதுவும் அது —

அரிசி யில்லா தரசாண்டோர்

அவனி தன்னிற் பலருண்டு

வரியில்லாமல் அரசாண்டோர்

வரலாற்றேட்டில் உண்டாமோ? 5

— இதுவும் அது —

சரியில்லாமல் அரசாண்டோர்

தமைய கற்றி விட்டிங்கே

வரியில்லாமல் அரசாள

வழிகண்டோனை யமைத்தாரே! 6

— சீர்திருத்த மணத்தாற் றந்தை சொற்காத்தல் —

சீர்திருத்தத் திருமணத்தைச்

சிறப்பாய் நடாத்தத் துணைபுரிந்தான்

நேர்மையான சட்டமதை

நிறைவேற்றியவன் அண்ணாவே 7

— இதுவும் அது —

கலப்புமணமு டிப்போர்க்குக்

கவினாய்ப் பொற்பூண் பரிசளித்தான்

கலப்பைத் தொழிலைப் புரிவோர்தம்

கண்ணீர் வடியாதவன்காத்தான் 8

*தமிழ்மண்ணின் களங்கத்தைப் போக்குதல்*

மறுப்பில் லாமல் அனைவருமே
வாக்கை யளித்தார் தமிழ்நாடு
சிறப்புப் பெயரை யிடுவதற்குச்
செய்தோன் அறிஞ னண்ணாவே! 9

*— அண்ணா குரலும் அவையோர் குரலும் —*

தமிழ்நா டென்றண் ணாவுரைக்கச்
சட்ட மன்ற உறுப்பினர்கள்
அமிழ்த மொழியால் வாழ்கவென
அறைய உலக மதிர்ந்ததடா ! 10

*— பேரறிஞன் சீரணிப் படையமைத்தல் —*

அண்ணா சீரணி எனும்படையால்
அரிய பணிகள் பல செய்தார்
கண்மாய்க் கரைக்குக் கவின் கொடுத்தார்
கலைக்கூடங்கள் எழுப்பிட்டார் 11

*— இளைஞர் சீரணிப் படையில் சேரக் குதித்தல் —*

தொண்டிற் சிறந்த இளைஞரெல்லாம்
தூய அமைச்சன் உரைகேட்டுக்
கொண்ட மகிழ்வை என்னென்பேன்?
குதித்த குதிப்பை என்னென்பேன்? 12

*— இந்தியின் இழிவை, யகற்றுதல் —*

இந்தி மொழியைத் தமிழ் மண்ணில்
இருக்க விடாமல் அவர் செய்தார்
சொந்தத் தமிழில் அனைத்தறிவும்
பெறவே நல்ல வழி செய்தார் 13

*— அண்ணா துணி வீந்தான் —*

இரண்டாண் டாக வரியின்றி
எழிலாய் ஆட்சி தனைச் செய்தே
அரண்ட மக்கள் தமக்கெல்லாம்
அண்ணா தானே துணி வீந்தான் 14

*— காவலர்கள் மக்களை நம்பச் சட்டத்தை திருத்துதல் —*

அன்னை நாட்டு மக்களையே
ஐயப் பட்டாற் சிறை செய்யப்
பன்னுஞ் சட்டந் தனைப் போக்கி
நம்பச் செய்தார் நமதண்ணா ! 15

*— காந்தியணியார் எண்ணமோ? —*

காந்தி யிறந்தால் நாமெல்லாங்
கள்ளைப் பருக லாமென்று
காந்தி யணியைச் சார்ந்தவர்கள்
கருதியிருந்தார் போலுமே ! 16

— காந்தியணியாரின் தீச் செயல் —

கள்ளைப் பருகி மக்களெலாங்
காட்டு விலங்காய் மாறிடவே
வெள்ளை யுள்ளக் காந்தியினை
விரும்பியிருந்தோர் செய்தனரே! 17

— காந்தி வழியிற் கரிய காந்தி செல்லுதல் —

அடைய வேண்டா வருமானம்
அளித்தே மதுவை மக்கட்கு
நடையைத் திருப்பேன் காந்தி வழி
நடக்கத் தயங்கேன் என்றானே! 18

— இதுவும் அது —

கரிய காந்தி நமதண்ணா
கவினாயுரைக்க விவ்வுரையை
உரிமை பெறவே யுயிர்நதோன்
உயர்ந்த கொள்கை நிலைத்ததடா! 19

— சாதிப்பித்தின்மை —

முதலி யாரா யிருந்தாலும்
முதலில் யாரென் றவனாய்ந்து
பதவியளிக்கும் பண்பாலும்
பாரில் உயர்ந்தோன் அண்ணாவே! 20

— தமிழ் வளர்த்தல் —

அரசு வண்டி யனைத்திலுமே
அழகுத் தமிழை யவன்குறித்தான்
அரசின் உந்து வண்டிகளில்
அழகுக் குறளை யவன்பொறித்தான் 21

— அண்ணாவின் அரும்பணி —

தமிழ்நாட் டரிசி யிங்கிருந்து
த்வறாய் எடுத்துச் செலப்பட்டால்
உமிழ்வீர் என்றே நமதண்ணா
உரைத்தான் ஒழிந்தார் அம்முடர் 22

— பாரதிதாசன் கூற்று —

தமிழை யறிந்தோன் றமிழமைச்சாய்த்
தலைமை யடைய வேண்டுமென
அமிழ்தும் நஞ்சுங் கலந்தபாவால்
அறைந்தான் பாரதி தாசனே ! 23

— பாவேந்தர் வாக்குப் பலித்தல் —

பாரதிதாசன் திருவாக்குப்
பலித்த திந்தத் திருநாட்டில்
சீரறி வாளி நமதண்ணா
சிறந்த முதலமைச் சாயிடவே ! 24

## — உலகத் தமிழ் மாநாட்டில் அண்ணா —

*— மாநாட்டின் சிறப்பு*

யானையெலாங் கொடிகளுடன் வரப்பின் னாலே
எழின் மிக்க சீரணியின் படையார் எல்லாம்
வானைத் தொடுங் கழைகளிலே கொடியைக்கட்டி
வரவங்கே நட்ந்ததடா தமிழ்மாநாடு. 25

*— மாநாட்டின் உயர்வு —*

பாண்டியனே யானாலுஞ் சேரனேனும்
பசியறியா வயிறுடைய சோழ னேனும்
ஈண்டெடுத்த அறிஞரண்ணா விழாவைப் போல
எடுத்ததுண்டா இனிமேற்றான்எடுப்போ
னுண்டா? 26

*—மாநாட்டுக் கூட்டத்தின் சிறப்பு—*

விண்ணகத்தே தமிழறிஞர் குழுமி விட்டால்
வெண்மதிதான் தவழ்ந்திட வோர் வழியேதென்ற
எண்ணமது கிளம்பிடவே தமிழ்மா நாட்டை
எடுத்திருந்தார் போலுமண்ணா சென்னை
மண்ணில் 27

*—மாநாட்டுக்கு வந்திருந்தோர்—*

வடக்கிருந்தும் தெற்கிருந்துங் கிழக்கிருந்தும்
மேற்கிருந்தும் வருகை தந்தே
அடக்கி வைத்த கருத்தெல்லாம் அவையினிலே
அட்க்கமுடன் அறைந்தார் கேண்மின்! 28

— இதுவும் அது —

பொன்னிறத்திற் குழலமைந்த மகளிர் வந்தார்
பூனை விழி தனைப் பெற்றோர் தாமும் வந்தார்
பன்னாட்டுத் தமிழறிஞர் குழுமியாங்கே
பைந்தமிழில் ஆய்ந்தவற்றைப் பகர்ந்
தாரம்மா ! 29

— மாநாட்டுத் தலைவர் —

இந்தியாவின் குடியரசுத் தலைவராக
இருந்தபெருந் தலைவர்சா கீர்உ சேன்றான்
வந்திருந்தார் தமிழ்விழாவிற் றலைமை யேற்க
வருவதென்ன கடலலையா ? எனக்கேட்டாரே 30

— சாகீர் உசேன் மொழிந்தது —

முடியெதென்று பகர்வதற்கு முடியா தங்கே
முணு முணுத்தார் வியப்படைந்தார் முடிவைக்
காணத்
துடிதுடித்துந் தோல்வியுற்றார் சாகீர் ஊசேன்
சொன்னதெல்லாம் வியப்புடனே சொன்னா
ரம்மா 31

— மொழி காத்தோர்க் கெழிற்சிலை —
[ — சிலையீந்த பெருமக்கள் — ]

நடிகர் திலகம் சிவாசியிடம்
நயந்து பெற்றார் திருக்குறளைக்
குடிகள் உயரத் தந்தவரின்
குறைவில் சிலையை யறிவீரே ! 32

— இதுவும் அது —

கொன்றை வேந்தன் தனையாத்துக்
கொடுத்த நன்றி தனையெண்ணிச்
சென்னை நகர மன்றமது
செதுக்கித் தந்த தெளவைசிலை 33

—இதுவும் அது—

கம்பன் சிலையைக் கோவையினர்
களிப்பாய்த் தந்தார் பாட்டெழுதுந்
தெம்பைத் தமிழர் விடாரென்று
செப்பு மந்தச் சிலை நின்றே ! 34

— இதுவும் அது —

தன்னைத் தமிழ்மா ணாக்கனென
சமாதி தன்னிற் குறிப்பதற்குப்
பன்னி மாண்ட போப்சிலையை
வழங்கப் பெற்றோம் திருவவையால் 35

— இதுவும் அது —

கால்டு வெல்லின் சிலையினையும்
களித்தார் தந்தே திருவவையார்
நூல்தந் தாரே தமிழ்மொழிக்கு
மேலை நாட்டுப் பேரறிஞர் 36

—இதுவும் அது—

வித்திட் டாரே விடுதலைக்கு
வீரம் மிக்க கவிதைகளாற்
செத்தும் வாழும் பாரதியின்
சிலையுஞ் சென்னை தந்ததுவே! 37

—இதுவும் அது—

பாரதி தாசன் திருச்சிலையைப்
பாங்காய்ச் சென்னை தந்திடவே
யாரது தமிழைப் பழித்திட்டார்
என்றே யந்தச் சிலைகேட்கும்! 38

—இதுவும் அது—

கப்பல் ஓட்டிச் சிதம்பரனார்
காத்தார் மானந் தனையன்று
செப்ப நன்றி தனையவர்க்கும்
சென்னை மக்கள் சிலைசெய்தார், 39

—இதுவும் அது—

தேம்பா வணியைப் புவிக்கீந்த
சிறந்த வீர மாமுனியை
நாம்பார்த் துளத்தில் மகிழ்வுறவே
மயிலை ஆர்ச்சு பிசப்பீந்தார் 40

—இதுவும் அது—

கற்பித் தோருங் கற்றோருங்
கற்புக் கரசி கண்ணகிக்குப்
பொற்கா சீந்து சிலையெடுத்தார்
புலவர் இளங்கோ வினைமறந்தே ! 41

—இதுவும் அது—

இளங்கோ எடுத்து வளர்த்தெழுத்தால்
ஈன்ற குழந்தை கண்ணகிக்குக்
களங்க மின்றிச் சிலையெடுத்தாற்
கலங்கார் அவளை யீன்றவரே! 42

— இதுவும் அது —

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கு
மினிய பண்பே யவர்க்குண்டு
சான்றோள் எனநாம் கண்ணகிக்குச்
சமைத்தாற் சிலையை யவர் மகிழ்வார். 43

— *சிலை திறப்புக் கலைவிழா* —

— *வள்ளுவர் சிலை திறத்தல்* —

வள்ளுவரின் திருச்சிலையைச் சிவாசியீய
மறத்தமிழன் நெடுஞ்செழியன் தலைமை யேற்க
உள்ளமெலாங் குளிரடையத் தெம்புந் தோன்ற
உவகையுடன் விசுவநாதந் திறந்து
வைத்தார் 44

— திருச்சித் தமிழ்வேங்கை கி.ஆ.பெ.
விசுவநாதத்தின் மாண்பு

தமிழென்றால் உயிரென்பார் தமிழுக் காகத்
தயங்காமற் பணிபுரிவார் இகழ்வார் தம்மை
உமிழ்ந்திடுவார் குறளோரின் சிலைதிறக்க
உரியவரே விசுவநாதம் முற்றும் மெய்யே ! 45

ஔவை சிலை திறத்தல்

ஔவையாரின் திருச்சிலையை வாசன் என்பார்
அமைச்சர்சத் தியவாணி முத்து வந்தே
ஔவைபுகழ் தனையோதத் திறந்து வைத்தார்
ஔவையாரின் திரைப்படத்தை யவர்தான்
தந்தார் 46

— விருத்தக் கம்பர் சிலை திறத்தல் —

உழவமைச்சர் கோவிந்த சாமியென்பார்
உயர்தலைவ ராயமர கம்பன் மெய்யாற்
பழம்புகழை நினைப்பதற்கு வழிவகுத்தார்
பக்தவச்ச லமென்பார்முன் முதலமைச்சர் 47

— அறிஞர் அண்ணாவின் மாண்பு —

செந்தமிழின் உயர்வுக்குக் குரல்கொடுத்த
இளையோரைச் சினத்தாற் சுட்ட
இந்தமுத லமைச்சரையுஞ் சிலைதிறக்க
அறிஞரண்ணா இணைத்தார் பார்மின் ! 48

### போப்பின் சிலை திறத்தல்

என்னையிங்கு புதைத்த பின்னால் எழுப்பு மந்த
எழிற்சமாதி தனிலேநான் தமிழ்மா ணாக்கண்
என்றெழுத வேண்டுமென்ற போப்பின் மெய்யை
ஆதித்தனார் தலைமையிலே பிசப்தி
றந்தார் 49

### —கால்டுவெல்லின் சிலை திறத்தல்—

பன்மொழியிற் புலமையுள்ள அப்பா துரையார்
பலர்பார்க்கத் திறந்துவைத்தார் கால்டு வெல்லின்
பொன்னுடலை மாணிக்கவேலர் தலைமை யேற்றார்
பொற்றமிழர் கரங்கொட்டிப் புதுமையென்றார் 50

### பாரதியின் சிலை திறத்தல்

நாமக்கற் பெருங்கவிஞர் இராம லிங்கம்
நமதுகவி பாரதியின் திருச்சி லையைக்
காமக்கண் கொண்டோருந் திருந்து தற்குக்
கரமசைத்தார் மாதவனே தலைமை யேற்றான் 51

### பாரதிதாசன் சிலை திறத்தல்

முத்துசாமி யெனுமமைச்சர் தலைமை யோடு
மூதறிஞர் வரதராசன் திறந்தார் வீர
வித்திட்ட பாரதியின் தாசன் கல்லை
மிரண்டோடத் தமிழ்ப் பகைவர் கரங்கொட்
-டிட்டார் 52

*வ. உ. சிதம்பரனார் சிலை திறத்தல்*

மதியழகன் எனுமமைச்சன் தலைமை யோடு
மகிழ்வுடனே இராசனென்பான் சிதம்ப ரத்தின்
புதியசிலை தனைத்திறந்தான் சிதம்ப ரந்தான்
பொங்குகடல் மீதுவிளை [யாடினானே!] 53

*—வீரமாமுனிவர் சிலை திறத்தல்—*

சாதிக்பாட்சா எனுமமைச்சர் தலைமை யோடு
தகைசான்ற அருளப்பா திறந்து வைத்தத்
தீதில்லாச் சிலையதுதான் சிறப்பு மிக்க
மாமுனிவர் சிலையாகும் மகிழ்வீர் கேட்டே! 54

*—கண்ணகியின் சினச்சிலை திறத்தல்—*

கண்ணகியின் பொற்சிலையைத் திறப்ப தற்கோர்
கரமிருந்தால் தமிழ்நாட்டிற் சிவஞா னத்தின்
பொன்னான கரமொன்றே யெனநி னைத்துப்
பொறுப்புதனை யவர்கரத்திற் கொடுத்தார்
சான்றோர் 55

*—கருணாநிதியின் தமிழ்த் துடிப்பு—*

திரைப்படத்திற் கண்ணகியின் சிறப்பைச் சொல்லிச்
சிறப்புவிக்க விளங்கோவைத் துடிது டித்த
உரைப்பதற்கே வியலாத சிறப்பு மிக்க
உயர்கருணா நிதியமைச்சன் தலைமையேற்
றான் 56

*ஊர்வலக் காட்சியின் சீர்செப்பும் பாக்கள்*

ஆணையிடு மறிஞரண்ணா ஆண்டு நிற்க
அவனருகே சாகிருசேன் விழாவைப் பார்க்க
யானைவர அதன்பின்னே இசையெ ழுப்பும்
ஏற்றம்மிகு கலைஞர்வர விழாவைக்கண்டார் 57

*கண்ணகியின் கண்ணீர்க் காட்சி*

வழக்குரைத்த கண்ணகியின் வடிவங் கண்டார்
மயக்கமுறப் பொம்மலாட்டக் காட்சிகண்டார்
பழச்சாற்றின் சுவையைவிட இனிப்ப தற்குப்
பைந்தமிழிற் கம்பனவன் காட்சி கண்டார் 58

*ஔவையின் முகங் காண்பது*

ஔவையாரின் எழிலுருவில் அடைந்தா ரின்பம்
அறப்பாரி கொடிக்குத் தேர் அளித்தகாட்சி
பௌவத்திற் கயலாடுங் காட்சி போல
பாவையரோ கரகாட்ட மாடக் கண்டார் 59

*மணியொலியால் நெறிகாத்த காட்சி*

ஆவினாலே யசைவுற்ற மணியோ சையால்
அறமுரைத்த திருகாட்சி யதற்குப் பின்னால்
காவியங்கள் இயற்றுகின்ற புலவ னுக்கு
கவின்றலையை யளித்தவனின் காட்சி
கண்டார் 60

—நக்கீரனாரின் நற்காட்சி—

மாமல்ல புரக்காட்சி மகிழ்வ தற்கு
மாண்புள்ள காவடியின் ஆட்டத் தோடு
நாம்மல்லர் எனவுரைக்க நக்கீரன்றன்
நலமான திருக்காட்சி தனையுங் கண்டார் 61

ஆண்டாளின் திருக்காட்சி

ஆண்டாளின் திருக்காட்சி யதற்குப் பின்னால்
யானைகட்டி மணியுதிர்த்த சிறந்த காட்சி
மாண்டவனுமெழும்பிவிடச் சிற்றூர்ப் பெண்கள்
மாண்புள்ள திருநடனக் காட்சி கண்டார் 62

—பூம்புகார்க் கட்சி—

பூம்புகாரின் வணிகத்தைப் பொறித்தி ருந்தார்
பொன்னான கோட்டைப்போர் தனையுங்
கண்டார்
தேம்பாவ ணியாத்தோன்சிறப்பைக் கண்டார்
சிதம்பரத்தை மறைமலையார் திருவைக்
கண்டார் 63

—தமிழ்ச் சான்றோர்தம் கவின் முகக் காட்சி—

பாரதியைக் கவிமணியை உ. வே. சா. வை
பைந்தமிழின் மாணாக்கன் போப்பைக் கண்டார்
பாரதியின் தாசனொடு கால்டு வெல்லின்
பாங்குருவைத் திரு வி.க. வோடு கண்டார் 64

—வடநாட்டான் வஞ்சகம்—

அஞ்சற்றலை வெளியிடவே நினைத்தி ருந்த
அறிஞரண்ணா நிறுத்திவிட்டார் வடநாட்
டானின்
வஞ்சனை யாற் றமிழிடத்தில் இந்தியென்னும்
வழிப்போக்கு மொழியமர வருந்தி நொந்தே! 65

— மாநாட்டில் மலர் தந்தார் மக்கள் திலகம் —

மலர்போன்ற மணமுடைய யெழுத்தா லாக்கி
மலரொன்றை மாநாட்டில் வெளியிட் டார்கள்
மலருக்குள் சுவைத்தேனும் இருப்ப தைப்போல்
மாநாட்டு மலருக்குட் சுவைத்தே னுண்டு 66

— இதுவும் அது —

மக்களிலே திலகமென்று பெயரைப் பெற்ற
மாண்புள்ள கொடைவள்ளல் குமணன்போன்
றோன்
மக்களது மனம் மகிழ மலரைத் தந்தான்
மாண்புள்ள இராமச்சந்திரன் அவனோர்
கூத்தன் 67

—பண்டாரகர் இலக்குவனார்தம் தொல்காப்பிய ஆராய்ச்சி
நூல் வெளியிடுதல்—

இலக்குவனார் எனுமறிஞன் தமிழைக் காக்க
எழிலடிகள் வருந்திடினும் சென்னை நோக்கி
கலக்கமின்றி நடந்திடுவேன் எனவு ரைத்தோன்
கவின்தொல்காப் பியநூலும் அரங்கே
றிற்று 68

— *மறைத் தமிழிற் பாப்பாட சிறைக்கம்பிதடுப்பதோ?* —

சிறையி லிருந்த கைதிகளைச்
　　சிறப்பாய் விடுவித் தவர்களையும்
முறையாய்க் கவிதை பாடிடவே
　　முதல மைச்சன் துணைசெய்தான்　　69

*—அண்ணனின் பொற்சிலை—*

அண்ணா துரைக்குச் சிலையமைத்தான்
　　அறவோன் இராமச் சந்திரன்
கண்ணாய் அண்ணன் றனை யெண்ணிக்
　　காட்டும் வழியில் அவன் செல்வான் !　　70

*அண்ணாவின் சிலையைத்துணைவேந்தர் இராமசாமியார் திறத்தல்*

இராம சாமி யெனுமறிஞர்
　　ஈடில் புலவர் துணைவேந்தர்
திராவிடர் கோனின் திருச்சிலையைத்
　　திறந்தார் தமிழ்மா நாட்டினிலே !　　71

— *இதுவும் மது*—

திறந்த பொழுதிற் கரங் கொட்டிச்
　　செப்பியிருந்த வாழ்த்தொலியால்
மறந்து போனார் மக்களெலாம்
　　வந்த தெங்கே என்பதனை!　　72

### — அறிஞனுக்குப் பரிசு —

அரிசியினில் குறளளித்தார் உருவைச் செய்தே
யளித்தார்கள் களிப்புடனே யதனை யண்ணா
பரிசாக அடைந்தவுடன் பகர்ந்தான் மண்ணிற்
பல்கலையிலுயர்ந்தவர்கள் தமிழ ரென்றே! 73

### — வெள்ளப்பெருக்கோ விழாப்பெருக்கு —

மடையினையே யுடைத்துவரும் பெருவெள்ளம்போல்
மறத்தமிழர் படைதிரண்டு வரக்கண் டோர்கள்
தொடைநடுங்கி தமிழுக்குத் தீங்கைத் தந்தால்
தூள்தூளாய் நொறுக்கிடுவார் என
மறைந்தார் 74

### — அறிஞர் அண்ணாவின் தமிழ்ப்பற்று —

விருதைச்சங் கரலிங்கம் உயிரை விட்டார்
வெறுப்பாலே "தமிழ் நாடு" எனும் நற்பேரை
பெருமையுடன் தமிழ்மண்ணிற் கிடாத தாலே
பெருமையுடன் அறிஞரண்ணா தமிழ்ப்
பேரிட்டான் 75

### — இதுவுமது —

மெட்ராசு எனும்பேரை விரட்டி யண்ணா
மிகச்சிறந்த தமிழ்நாடு பெயரை வைக்க
தட்டியுமே மருத்துவர்கள் உடல்நோ யோடு
சாகின்றேன் பெயர்வைத்தாற் போது
மென்றான் 76

—இதுவும் அது—

வெளிநாட்டுத் தமிழறிஞர் வரக்கண் டிங்கே
விரைவுபெற்றார் தமிழ்நாட்டுத் தமிழ்ச்
சான்றோர்கள்
ஒளிந்தாலும் விடமாட்டோந் தமிழைத் தாக்கின்
உடைத்திடுவோம் மூக்கையென கொதித்தெ
ழுந்தார் 77

— உலகத் தமிழ்மா நாட்டின் பயன் —

பத்துநாட்கள் இசையரங்குங் கவிய ரங்கும்
பழகுதமிழ் உயையாற்றுங் கூத்துங் கண்டு
மெத்தனமா யிருந்தவனு மெழுந்த மர்ந்து
மேன்மைமிகு தமிழ்மொழியை யுயர்த்த
லானான் 78

— தமிழ்நாட்டின் வளங்கண்டார் —

விசுவநாதஞ் சிவஞான மிருவ ரோடும்
வெளிநாட்டுத் தமிழறிஞர் தமிழகத்தின்
பசுமையான நிலங்களையும் கலைக்கூ டத்திற்
பதிந்துள்ள பொருட்களையும் பார்த்தார்
கேண்மின்! 79

—ஈழன் மதுரைத்தமிழ்ச் சங்கத்திற் பேசியது—

தேமதுரத் தமிழோசை யெனச்சொல் லாது
தேமதுரைத் தமிழோசை யெனச்சொன் னானே!
மாமதுரைத் தமிழோசை யெனச் சொன் னாற்றான்
மதுரைக்குச் சிறப்பென்றான் ஈழன் வந்தே 80

## நாம் தமிழரே!

[பரணியானது நந்தமிழ் மல்லனுக்குப் பாடப் படுகின்ற இலக்கிய மாகும். இத்தேர்தற் பரணியின்விதிக்கேற்ப, (முன்னே கூறியுள்ள விதியை நினைவிற் கொள்க) வென்ற தலைவனுந் தோற்ற தலைவனுந் தமிழர்களே! தோற்றோரின் தொண்டும் நாட்டிற்கு இன்றியமையாததே! இப்பகுதியில் தோற்ற அப்பெருமக்களின் ஏற்றத்தைக் கூறித் தொண்டாற்ற பணிக்க நாம் தமிழரே என்று நினைவுறுத்திப் பாடுவோம்]

என்றும் நாந்தமிழர் என்ற எண்ணமுடன்
ஏற்றம் மிக்கதொண்டைச் செய்வதால்
நன்றே செய்யுமுமை நாட்டை யாளமக்கள்
நண்ணும் நாள்வரவும் வேண்டுமே! 1

தொண்டு செய்யப் போட்டி யிட்டோர்
தோற்ற போதுந் தேர்தலில்
தொண்டில் உள்ளம் கொண்ட தொண்டர்
தோல்விக் காக அஞ்சிடார்! 2

தோல்வி தந்த போதும் மக்கள்

துன்ப முற்ற போதினில்

பால்ம னத்தைக் கொண்ட தெண்டர்

பாங்காய்த் தொண்டைச் செய்வரே ! 3

மாட்டுச் சின்னந் தன்னைத் தாங்கி

மாண்பாய் வாழ மக்களும்

நாட்டில் வந்த நல்ல கட்சி

நாணுமாமோ தோல்வியால்! 4

அணைகள் கட்டியே நீரைத்தேக்கி நீர்

அதனால் மக்களின் வறுமை போக்கி நீர்

இணையில் செல்வமாங் கல்வி தன்னையும்

எளியோர் பெற்றிட வழிகள் செய்துளீர் 5

சாலை போட்டுமே சிற்றூர் கட்கெலாம்

சாலை முற்றிலு மிட்டீர் மின்விளக்

கேழை மக்களும் ஏற்றங் காணவே

ஈடில் நற்பணி செய்ய எண்ணிநீர் 6

குறளைத் தந்தநற் குரிசில் வள்ளுவர்
குணத்தை எண்ணிடக் குறளார் நாளினை
அரசு நாளென அறைந்தே ஒய்வினை
யளித்த உம்பணி யரிய நற்பணி ! 7

ஆங்கி லேயனை யோட்ட வன்றுநீர்
ஆர்த்தெ ழுந்ததை யார்ம றப்பரோ ?
தீங்கு செய்தவர் தம்மை யோட்டவே
சீறி வந்ததை யார்மறப்பரோ? 8

கப்பல் ஓட்டியன்று காத்தான் மானமதைக்
காந்தி வாயுரையைக் கேட்டவன்
செப்ப வாயுமுண்டோ நீவீர் செய்ததொண்டை
சிங்கம் போன்றமல்லர் நீவிரே! 9

கொடிய குண்டினாற் குருதி சிந்திடக்
குறிவைத் தென்னைநீ ரழித்த போதிலும்
கொடியை விட்டுநான் உயிரைக் காத்திடுங்
குணத்தைப் பெற்றிடேன் எனஉ ரைத்தவன்! 10

திருப்பூர் தந்தவன் குமர னென்பவன்
திகழ்ந்த தும்மணிச் சிறந்த தொண்டனாய்
இருப்ப தாற்புகழ் இருக்கு மென்றுமே
எழுவீர் தொண்டினை யினிதாய்ச் செய்யவே! 11

மணமுடித்திடா துழைக்குங் காமரா
சிருக்கு மும்பணி மடிந்து போவதோ
குணமும் நல்லருங் குறிக்கோ . ளோடும்நீர்
குதிக்க வேண்டுமிப் புவியைப் பேணவே! 12

அண்ண னோரணியை யன்பா லாதரிக்க
அந்தப்பேரணிக்குப் போட்டியாய்
அன்னை நாடுயரத் தம்பி யோரணியில்
ஆற்றின் நற்பணியைத் தீயதோ 13

எந்தப் பேரணியால் நாடு சீரடையும்
என்று மக்களெலாம் ஆய்ந்தபின்
அந்தப் பேரணியை யாளச் செய்வதுதான்
அழியா மக்களாட்சி யாகுமே ! 14

விரும்பியுமை யரசாளப் பணித்த மக்கள்
வெறுப்பாலே விலக்கி விட்டால்
பெரும் பணிகள் பலபுரிந்து மனங்கவர்ந்து
அரசதனைப் பெறுவீர் இன்றே 15

பாரதியின் தமிழ்க்கவிதை பயின்றபின்னும்
உமதுஅணி பதற லாமோ?
பாரதனில் ஒற்றுமையை வளர்ப்பதற்குத்
தோற்றாலு மறக்க லாமோ? 16

தமிழ்முனிவர் திருவிக தமைப் பெற்ற
உமதுஅணி தளர லாமோ!
உமிழ்ந்தாலுந் தமிழ்க்குலத்தோ ருயர்வதற்குப்
பணிபுரியா துலகில் நீவிர் 17

எவ்வினத்தின் உரிமையையு மழிக்காமல்
இணைத் தொன்றா யிருப்ப தற்கே
எவ்வரிய பணியேனும் புரிந்துலகை
இணைத்திடநீர் எழுவீர் இன்றே! 18

*— அண்ணா வழியைக் கடைப்பிடிப்பீர்! —*

அண்ணா போற் குடியரசில் முடியரசன்
　　இருந்ததுண்டா ?அன்பால் அன்றோ
அண்ணாதங் கழகத்தில் முடியரசா
　　யமர்ந்திருந்தான் அறிவோ மன்றோ ! 19

அண்ணாதம் வாயாலே
　　யறைந்த பின்னர் அதைமறுக்க
எண்ணாத தம்பிகளே
　　எழிற்றொண்ட ராயமர்ந்தார் ! 20

தலைவனண்ணா உரைத்த வழி
　　தயங்காமல் நடந்துவரும்
நிலையிலன்றோகழகத்தில்
　　நிறைந்திருந்தார் அருந்தொண்டர். 21

தலைவனாக இருந்தாலுந்
　　தம்பியர்கள் தந்தாயின்
தலைமகனா யவனையெண்ணி
　　தமது யிரை யளித்தனரே ! 22

அண்ணாவின் அணிபோல
அணியதனைச் சீர்திருத்திப்
பொன்னான அரசியலிற்
புகுவோர்க்கு வருஞ்சிறப்பே ! 23

தொண்டு தொண்டு தொண்டே என்று
தூய தொண்டைச் செய்தவர்க்
குண்டு நாட்டை யாளு கின்ற
உரிமை தொண்டைச் செய்க நீர் ! 24

தேர்விற் றோற்றவர்கள் திரும்பக் கற்றெழுதி
தேர்வில் வெற்றிபெறுந் தன்மையில்
தேர்தற் போட்டியினாற் றோற்றுப் போயினாலுந்
தேடித் தொண்டுசெய்து வெல்கநீர் ! 25





## மதுரைச் சொல்லேர் உழவர்களுக்கு

*— மனமார்ந்த வாழ்த்துக்கள் —*

1 பாப்பையா பட்டிமன்ற யாப்பையா! பேச்சறியின்
பூப்பையா! மாணவர்க்கோ பொன்னான-காப்பையா!
தோப்பையா சொற்கனிக்கும்; கையிரண்டாற் சென்ற வரைக்
கூப்பாத தேன்மனமே கூறு!

2, உளங்கவர்ந்த ஒருகுமரன் உயர்மதுரைத் திருநகரில்
விளங்கிவரு மிளங்குமரன் விளம்பிடுவா னடிவேர்ச்சொல்
களங்கமிலா அவன்றமிழ்ச் சொல் கவினளிக்குந் தமிழ்மொழிக்கே
வளங்கொடுக்கு மவனடியை வணங்கிடவே மகிழ்ந்திடுவோம்

3. சொல்விளங்கும் எம்பெருமாள் சொல்வழங்கின் பட்டிமன்றிற்
பல்மூடா தெவ்வுதடும் பாரதிர-நல் லொலிகள்
தோன்று மவையிடையே தோன்றுமடா கையொலிகள்
சான்றுக் கவரவையைச் சார்,

4. சக்தி பெருமாள் தமிழ்கேட்டாற் பட்டிமன்றிற்
சொக்கித் திரிவீர் துணிவுறவேப்- பக்குவமாய்ச்
சொல்லும் கருத்தழகும் சூளுரையாம் பேருரையும்
வெல்லும் உலகை விரைந்து'

5. நற்கோபா தாமரையாள் சொற்போரை நான் சொலவோ
பொற்பூத்தேன் தந்ததது போலிருக்கும் — கற்றார்க்கே!
ஆர்வமுறும் மாமன்றம் அன்னையவள் தன்னுரையிற்
சீர்மிகுந்து தோன்றுமவை சேர்.

---

A
64



## புலவர் ஆ. நாகராசன்

ஆண்டு 1948-இல் மதுரையில் பிறந்தார். தலைமகனாய்ப் பெற்றெடுத்தோர் திரு. ஆலடியா பிள்ளை திருமதி பாக்கியத்தம்மாள் தம்பதியர். பள்ளிப் பருவத்திலேயே கவிதையோடு துள்ளி விளையாடியவர். பதினெட்டு அகவையிலேயே தரணி போற்றும் இப்பரணி பாடியவர். கல்லூரிப் படிப்பை திண்டுக்கல் புலவர் செந்தமிழ்க் கல்லூரியிலும், மதுரைத் திருவள்ளுவர் கழகத்திலும் கற்றவர் பட்டிமன்றத்திலும், பாட்டரங்கிலும் பைந்தமிழை படையென கிளப்பிடும் பாங்கான பேச்சாளர்; இவரிடம் அருந்தமிழ் அருவி நீரென ஆற்றொழுக்கமாக நடையிடும் கல்லூரி விழாக்களைக் காண வந்தோரும் இவருக்குப் பரிசில் தந்து பாராட்டிச்சென்றனர் சிறுகதைகள், நாடகங்களிலும் இவர் ஒரு சிறுத்தைப்புலி. அரைக் காற்சட்டையிலும் ஆர்ப்பரித்துப் பேசி அனைவரையும் அயர வைத்தவர். புயலைக் கவிதைகளில் புறப்படவிட்டவர் இடிமுழக்கங்கள் கவிதைகளின் இலக்கணமாகக் கொண்டவர். மதுரைக் கோட்சில் பணியாற்றும் இவர் அவ்வாலையிலும் பல்வேறு பரிசுகளைத் தனதாக்கிக் கொண்டவர். அமைதியும் பண்பும் அரவணைக்கும் செல்வங்களாக ஏற்ற தமிழ்த்தாயின் நன்முத்து புலவர் ஆ. நாகராசன்.

**புலவர் ம. சுப்பிரமணியன்**

---

*"அண்ணா பரணி காலத்தை உணர்ந்த கருத்துப்படையல் சுருங்கிய சொற்களால் செய்திகள் அனைத்தும் செறிவாக மிடையப்பட்டுள்ளன"*

**டாக்டர் மு. தமிழ்க்குடிமகன்** எம்.ஏ., பிஎச்.டி.,

---

செந்தில்வேலன் அச்சகம் - பி. பி. நகர் - மதுரை-16